# சுதந்திரப் பறவைகள்

வல்லிக்கண்ணன்




14, சித்திரைக்குளம் மேற்கு வீதி,
மயிலாப்பூர், சென்னை-600 004.

## நூல் விபரக் குறிப்பு

நூலின் பெயர் : சுதந்திரப்பறவைகள்

நூலாசிரியர் : வல்லிக்கண்ணன்

நூல்வகை : சிறுகதைத் தொகுப்பு

வெளியீடு : பூங்கொடி பதிப்பகம்
மயிலாப்பூர், சென்னை-4.

விலை : ரூ. 25-00

நூல் உரிமை : ஆசிரியர்

அச்செழுத்து : 10 புள்ளிகள்

தாள் : 10.7 வெள்ளைத்தாள்

அச்சிட்டோர் : சின்னநிலா அச்சகம்
மயிலாப்பூர், சென்னை-4.

வெளியிட்ட ஆண்டு : டிசம்பர், 1994.

பக்கங்கள் : 162

# பதிப்புரை

பழம்பெரு இலக்கியவாதியான திருமிகு. வல்லிக் கண்ணன் அவர்களைப் பற்றியோ அவரது எழுத்துக் களைப் பற்றியோ அறிமுகமோ விளக்கமோ அவசிய மற்றது.

எழுத்தையே ஒரு தவமாக, தனது வாழ்வாகவே கொண்டவர் அவர். ஒரு உயர்ந்த நிலையில் இருந்து கொண்டு தனது எழுத்துக்களை மலினப்படுத்தி விடாமல் பண்போடும், எடுத்துக்காட்டாகவும் எழுதுபவர். அவர் எழுத்தாளர்களுக்காகவும் எழுது பவர். அற்புதமான மன உணர்வுகளை நிகழ்ச்சி களை மனதில் நிற்கும் வண்ணம் நறுக்குத்தரித்தாற் போல எழுதி படிப்பவர்களது மனதில் ஆழமான இடத்தைப் பிடித்தவர்.

அவரது சிறுகதைத் தொகுதியினை வெளியிடு வதில் பூங்கொடி பதிப்பகம் பெருமைப்படுகிறது.

அன்புடன்
வே. சுப்பையா
பூங்கொடி பதிப்பகம்

# பொருளடக்கம்

# காளவாய்

சோம்பல் சுகவாழ்வும், அதன் மீது எழுந்த ஒருவித அமைதியும், நிலவுகின்ற சிவபுரத்தில் பல ரகமான உணர்வின் அலைகளை எழுப்பிவிடும் பாறாங்கல் போல் வந்து விழுந்தது அந்தச் செய்தி.

—இன்னொரு 'கில்லன்' கட்டுகிறார்கள்.

மூன்றாவது 'கில்லன்'. இப்போது இயங்கிக் கொண்டிருக்கும் இரண்டையும் விட ரொம்பப் பெரியது. வேகமாகக் கட்டப்படுகிறது. உற்பத்திப் பெருக்கைத் துரிதப்படுத்துவதற்காக...

'இன்னொரு கில்லனா?'

'ஆமா. இப்ப இருக்கிற ரெண்டையும் முழுங்கி ஏப்பம் போடக்கூடிய பகாசுரக் கில்லன்...'

'இப்பவே ஊருக்குள்ளே இருக்க முடியலே, அதுவும் வந்தாச்சோ, அப்புறம் வேறே வினையே வேண்டாம்!'

'சிமிண்டுப் புகை பூரா இங்கேதான் வந்து சாடும்...'

'நாத்தம் வேறே!'

'காத்து இந்தப் பக்கமா அடிக்கிறபோது, ஊரெல்லாம் ஊத்தப் பொண நாத்தம் குடலைப் பிடுங்கும்...'

'இப்போ எங்கே பார்த்தாலும் சிமிண்டுத் தூசி. கூரையிலே, தட்டட்டியிலே, வீட்டுச் சுவர்களிலே, தரையிலே, எங்கே பாரு, அடை அடையாப் படிஞ்சுபோய் கிடக்கு, எத்தனை தரம் பெருக்கினாலும் மறுபடியும் பெருக்கி அள்ளலாம். அவ்வளவு தூசி! ரொம்பப் பெரிய

புகைபோக்கியும் ஏற்பட்டு, மூன்றிலேயும் புகை குப்குப்னு வரும்போது இந்த ஊரே பாழாயிடும்.'

'இப்பவே பயிருபச்சை எல்லாம் கருகி நாசமாகுது. நாற்றுகள் வளர்ந்து பசுபசுன்னு வரும்போது இந்தப் புகையும் தூசியும் பட்டு, நுனி கருகி நோய் ஏற்படுகிறது. என்ன உழுது பாடுபட்டு என்னத்துக்கு? நெல்பயிர் இந்தப் புகையினாலே ரொம்பவும் பாதிக்கப்படுது. இன்னொரு கில்லனும் வந்துட்டா என்னதான் பண்ணமுடியும்?'

'ஊரை விட்டே ஓடிப்போக வேண்டியதுதான்.'

'பயிரிட்டுப் பிழைக்கவே முடியாது மனுசன்!'

'வீட்டுச் சுவரு, மரம் மட்டை, ரோடு, வயல் நெடுகத் தூசி வெள்ளையாப் படிஞ்சு உறைஞ்சு கிடக்குதே...'

'அறுவடை செய்துவிட்டு, சும்மா கிடக்கிற வயலிலே கொஞ்ச நாட்களுக்குப் பிறகு போய்ப் பாரு. சிமிண்டுத் தூசி அப்படியே படிஞ்சு காய்ந்து பொறுக்காடி இருக்கும். பிறகு உழுகிறபோது கொஞ்சம் கஷ்டமாதானிருக்கு.'

'அப்படி இருக்கையிலே' இந்த ஊர்லே உள்ள எல்லாரும், பெரியவங்க சின்னவங்க குழந்தை குட்டிக எல்லாரும், நாள் பூரா இந்தக் காத்தை சுவாசிச்சுக்கிட்டுத் தானே இருக்காங்க? சிமிண்டுத் தூசி மூக்கு வழியா உடலுக்குள்ளே போய்க்கிட்டுத்தானே இருக்கும்? அது உடம்புக்குக் கெடுதிதானே?...ஊம்ம்...இன்னும் பெரிய புகைபோக்கி வேறே ஏற்பட்டு, அது வழியாகவும் புகை நிறைய நிறைய வந்தா நம்ம பாடு என்ன ஆகிறது?'

பெருமூச்சு. வேதனை உயிர்ப்பு. ஏக்கம். சோகம். என்ன செய்வது என்று புரியாத ஏலாத்தனம்...

அந்த ஊரிலே பலவித உணர்ச்சிகள் பல ரகமான ஒலிகளையும் பொங்கி எழச் செய்துகொண்டிருந்தன.

சிவபுரம்....

அழகான ஊராக இருந்தது. முன்னொரு காலத்தில் அல்ல. இருபது இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்புவரை.

வளர்ந்தோங்கிய ஆலமரங்கள் தூணென இருபுறமும் நின்று, நடுவில் நிழல் அமைத்துத் தரும் சாலையில் நடப்பதே சுகமான அனுபவமாக இருக்கும்.

அதிலும், உயர்ந்த கரையென அமைந்த ரஸ்தாவின் ஒருபக்கம், சிற்றலைகள் சிலிர்க்கும் நீர்ப்பரப்பு குளுமையாய் விரிந்து கிடக்கிற குளமும்—

இன்னொரு பக்கம் துளிர்த் தலைகளைக் காற்றில் அசைந்தாடவிட்டுப் பச்சைக்கடலெனக் கண்ணெட்டிய தூரமெல்லாம் விசாலித்துக் கிடக்கும் நெல் வயல்களும்,

பச்சைப்பந்தலெனக் கவிந்து கிடக்கும் ஆலமரங்களில் மைனாக்கள் கூடிக்குலவிக் கலகலப்பொலியைக் கொட்டிக் கவிழ்க்கிற சூழ்நிலையும்—

மாலை உலா போகிறவர்களுக்கு மட்டும்தான் 'மனசுக்கு நலம்' பயக்கும் என்பதில்லை. எவ்வேளையிலும் எவருக்கும் குளுமையும் இதமும் தரும்.

ஆனால் இப்போது அல்ல! 'முன்னொரு காலத்தில்' என்று சொல்லப் படவேண்டிய அவசியத்தை உண்டாக்கி விட்ட இருபது— இருபத்தைந்து வருட காலகட்டத்திலே தான்.

ஊரில் வேலையற்றவர்கள் பெருகினார்கள். எதை நாசப்படுத்தியும் எம் நலம் பேணுவோம் எனத் துணிந்தவர்கள் அதிகரித்தார்கள் பொதுச் சொத்தைப் பாழ் பண்ணி எப்படியும் பிழைப்பு நடத்துவோம் என முனைந்தவர்கள் பெருத்து விட்டார்கள்.

சாலை மரங்கள் ஒவ்வொன்றாய், பலவாய் மொட்டை யடிக்கப்பட்டன. பட்டை உரிக்கப்பெற்றன. வெட்டி வீழ்த்தப்பட்டன— ஆட்டு மந்தைகளுக்காகவும், விறகு வகை களுக்காகவும்.

காலமும் துணை புரிந்தது.

சாலை வெறும் ரஸ்தா— மரம் எதுவுமில்லாத கட்டாந்தரை வழி— ஆயிற்று, குளம் அடிக்கடி வறளலா யிற்று. நெல் வயல்கள் சரியாகப் பலனளிப்பதில்லை என்ற முனகல் வளர்ந்தது.

அந்நிலையிலேதான்,

ஊருக்கு மேற்கே, இரண்டு மைல் தூரத்துக்கு அப்பால், வறண்ட சூழலாய், முட்செடிகள் தவிர வேறு பயிர் எதுவும் தலைகாட்ட வசதி செய்யாத இடமாய் காய்ந்து கிடந்த வெறும் பரப்பிலே கட்டிடங்கள் முளைத்தன. இயந்திரங்கள் குவிந்தன. புகைக்கூண்டு வளர்ந்தது. சிமிண்ட் ஆலை தொழில் புரியத் தொடங்கியது. பலபேருக்கு வேலை கிடைத்தது. சிவபுரம்வாசிகளில் அநேகருக்கும் தான்.

ஆகவே அந்தத் தொழிற்சாலையை வாழ்த்தினார்கள் பலரும்.

நன்மைகளுக்கு இடமளித்த அந்த ஆலையினால் பெரும் தீமையும் தோன்றிவிட்டது என்பதை அக்கம் பக்கத்து ஊரார் உணர வெகுகாலம் தேவைப்படவில்லை.

படுத்துக்கொண்டே புகைக்கும் ஒரு அசுரன் வாய்ப் பெரும் சுருட்டுப்போல நெடிதுயர்ந்து வானோக்கி நின்ற புகைப்போக்கி ('கில்லன்') சதா வெளியேற்றிக் கொண்டிருந்த வெண்புகைச் சுருள்கள் பறந்தன; படர்ந்தன; பரவின; படிந்தன. அவை பட்ட இடமெல்லாம் வெண் தூசி. சிமிண்டுத் தூசி. அதன் வீச்சு எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள

சிறுமலை ஒன்று முடிய எட்டியிருந்தது. அதன் பாதிப்பும் ஊர்மக்களால் உணரப்படலாயிற்று.

என்றாலும் சிமிண்ட் தொழிற்சாலை ஒரு புதுமையாய், வேடிக்கைக் காட்சியாய், வேலை வாய்ப்பு தருவதாய், வேண்டியவர்க்கு வேண்டிய வேளை வேண்டிய அளவு சிமிண்ட் கிடைக்க வகைசெய்வதாய் இருந்தது.

காலம் ஓடிக் கொண்டிருந்தது. பிசினஸ் லாபத்தைக் கருத்தில் கொண்ட தொழிலதிபர்கள் 'நஷ்டம்— லாபம் இல்லை' என்றார்கள். வேலை வாய்ப்பு குறைந்தது. சிமிண்டும் தாராளமாகக் கிடைக்க வழி இல்லாது போயிற்று. உற்பத்தியைப் பெருக்குவதற்காக புது ஏற்பாடுகள் நடந்தன: இரண்டாவது 'கில்லன்' பிறந்தது. முதலாவது புகைப் போக்கியை விட அளவிலும் ஆற்றலிலும் பெரியது இது.

அழகு குலைந்துபோய் வெறுமைப் பட்டுக்கொண்டிருந்த சிவபுரத்தின் இனிமையை, குளுமையை, வசீகரத்தை மேலும் சீர்குலைய வைத்தது சிமிண்ட் தொழிற்சாலை.

அதை ஒட்டிய பிரதேசம் நாகரிகத் தொழில் நகரமாய் மாறி, வேக வளர்ச்சி பெற்றுக் கொண்டிருந்த காலத்திலேயே அக்கம்பக்கத்துக் கிராமங்கள் பாழாகிக் கொண்டிருந்தன.

பலரைக் கெடுத்தே தனி ஒருவன் பெரும் பணக்காரனாய் வளரமுடியும் என்கிற நித்திய - நிரந்தர உண்மையின் பிரத்தியட்சப் பிரமாணமாக விளங்கியது இதுவும்.

ஊர்க்காரர்கள் கூடிப் பேசினார்கள். மக்களின் ஆரோக்கியத்துக்கு ஊறு செய்வதையும், விவசாய முயற்சி களைச் சிதைப்பதையும் சுட்டிக் காட்டி தொழிலதிபருக்கும், மாவட்ட அதிகாரிக்கும், நாட்டின் அரசுக்கும் மனுக்கள் எழுதி அனுப்பினார்கள்.

'கருணை கோரும்' மனுக்கள் என்றாவது, எங்காவது காருண்யமுள்ள' அதிபர்களின், அரசுகளின் இதயத்தைத்

தொட்டது உண்டா என்ன? அவர்களுக்கும், அவைகளுக்கும் மனிதாபிமானம் ஊறுகின்ற இதயம்தான் உண்டா என்ன?

ஆகவே, புகைப்போக்கிகள் பெரும் அளவில், சிமிண்ட் தூசி கலந்த வெண்புகையை இரவு பகல் எந்நேரமும் வெளியேற்றிக் கொண்டுதான் இருந்தன. சிவபுரமும் சுற்றி யுள்ள ஊர்களும் அதனால் பாதிக்கப்படத்தான் செய்தன.

சிவபுரம் அதிகமாக பாதிக்கப்பட்டது— ஆலையின் வெகு அருகாமையில் அது இருந்ததால்.

மக்கள் முணமுணத்தனர். புகைந்து, கொதித்து ஏசிவிட்டு, சும்மா இருந்தனர்.

கால ஓட்டத்திலே,

மேலும் அதிக லாபம் பெறுவதற்காக ஆலை விஸ்தரிக்கப் பட்டது. பெரும் பணக்காரர்கள் புதிய பங்குதாரர் ஆயினர். ஆற்றலிலும் அளவிலும் பெரிய மூன்றாவது 'கில்லன்' கட்டும் வேலை வேகமாக நடை பெற்றது.

உழுது பயிரிட்டுப் பிழைப்பு நடத்துவோரும், நிலத்தை நம்பி வாழ்வோரும் தங்கள் உள்ளத்து உணர்ச்சிகளுக்கு ஒலி வடிவம் கொடுத்துக் கொண்டிருந்த நாளையிலே,

ஏதாவது செய்தாக வேண்டும் என்று துடித்த சிலர் கூடினார்கள். நிலைமையை விளக்கி மனுக்கள் தயாரித்து, மக்களின் கையெழுத்து சேகரித்தார்கள். தொழில் அதிபர், மாவட்ட அதிகாரி, மாண்புமிகு மந்திரிகள் எல்லோருக்கும் அனுப்பினார்கள். மாவட்ட அதிகாரியிடம் நேரில் முறையிட்டு, ஊரார் குறைகளை எடுத்துச் சொல்லி, அவரையே வந்து பார்த்து உணரும்படி கோருவதற்காக, தேர்ந்தெடுத்த சிலர் கொண்ட குழு ஒன்று சென்றது. 'ஆராய்ந்து, ஆவன செய்வோம்' என்றார் அதிகாரி.

அதுவரை 'கில்லன்' கட்டும் வேலை நிறுத்தப்பட்டது.

பம்பாயில், வேறு சில இடங்களில், இது போன்ற சிமிண்ட் ஆலைகளில், புகை மேலே போவதில்லை. பூமிக்குக் கீழேயே கொண்டுபோய், குளிரவைத்து, சிமிண்ட் தூளை சேகரம் செய்வதற்குக்கூட வசதியான ஏற்பாடுகள் இயந்திர உதவியால் செய்யப்பட்டுள்ளன. அதுபோல் இங்கும் அமைக்க வேண்டும்.

இப்படி ஒரு யோசனை. நிபுணர் வந்தார்; பார்த்தார்; போனார், என்னென்னவோ பிளான்கள்; ஏதேதோ பேச்சுகள். பிறந்தன. தேய்ந்தன. ஒடுங்கின.

— இதற்கெல்லாம் பெரும் பணம் பிடிக்கும். பூமிக்கு அடியில் கட்டிடம் அமைக்கவும், புகையைத் திருப்பிவிடும் இயந்திரங்கள் வாங்கவும், ஆவன செய்யவும் எவ்வளவோ பணம் செலவு செய்தாக வேண்டும்.

தொழில் அதிபர்கள் மத்தியில் குழப்பம், கவலை, பெருமூச்சு.

அவர்கள் உள்ளத்தில் இருட்டு

* * *

இருட்டிலே திருட்டுத்தனமாக எவ்வளவோ காரியங்கள் நடைபெறுகின்றன!

பணம் படைத்தவர்கள் சுயநலத்துக்காக ஓரளவு பணத்தை தாராளமாக—இருட்டிலும் வெளிச்சத்திலும்— சதிராடவிடத் தயங்குவதில்லை.

சக்திமிக்க சதிராட்டம் எவரையும் உலுக்கிவிடும். ஐயமில்லை.

பணம் பெரும் சக்திவாய்ந்தது

'ஈட்டி எட்டிய மட்டில் பாயும்; பணம் பாதாளம் வரை பாயும்' என்று 'அந்தக் காலத்திலேயே' சொல்லி விட்டார்களே அறிவாளிகள்!

மனிதாபிமானம் அற்றுப்போய், இருள்மண்டிய உள்ளப் பாதாளத்திலே பணம் பாய்ந்து, பதிந்து, பலவும் செய்யும். இது நாட்டு நடப்பு; வரலாற்று உண்மை!

மூன்றாவது 'கில்லன்' கட்டுமான வேலை மீண்டும் நடைபெறலாயிற்று.

மறுபடியும் ஊர் மக்கள் உணர்வு கொண்டு எழுந்தார்கள் ஒரு சிலராகப் போகாது, உழவரும் பிறருமாகப் படையெனக் கிளம்பி நடந்து போனார்கள் மாவட்ட அதிகாரியைக் கண்டு முறையிட.

போனார்கள். காணவில்லை.

'அதிகாரி அவசர அலுவல் காரணமாக வெளியூர் போய் விட்டார். அரைமணி நேரத்துக்கு முன்னாலேதான் போனார். நாளைதான் வருவார்.'

அவர்களுக்கு அறிவிக்கப்பட்ட தகவல் இது. விவரம் அறிந்தவன் தெரிவித்த உண்மை—

'நீங்கள் வருகிற விஷயம் ஃபோன் மூலம் தெரிந்தது- தொழில் அதிபர்தான் பேசினார். இன்று அவங்க முக்கிய மீட்டிங்னு இவரையும் அழைத்தார். இவர் அங்கேதான் போயிருக்கிறார். அவசர அலுவல்—அதிபரின் குளுகுளு பங்களாவில் அருமையான விருந்து சாப்பிடுவதுதான்!'

பாதிக்கப்பட்டவர்கள் குமைந்தார்கள், புகைந்தார்கள். வாயில் வந்தபடி பேசினார்கள். மனக்கொதிப்போடு கலைந்தார்கள். பண பலத்துக்கு எதிராக அவர்கள் வேறு என்னதான் செய்ய இயலும்?

ஏதாவது செய்தே ஆகவேண்டும் என்ற துடிப்புடைய சிலர் மந்திரிகளுக்கு நெடுந்தந்தி அனுப்பினார்கள். நெடுந் தொலை பயணம் செய்து அவர்களை நேரில் கண்டு முறை யிடுவோம் என்று கிளம்பினார்கள்.

திருவாளர் அனுபவம் சிரித்தார்.

'மக்கள் நலமும் சோஷலிசமும் பேசிய கட்சியும், அதைச் சேர்ந்த பெரியவர்களும் ஆட்சியில் இருந்த போதும்தான் முயற்சி செய்தீர்கள், என்ன நடந்துவிட்டது? ஆளும் இனம் எப்பவும் பணக்காரர்கள் பக்கம்தான். பணக்காரர்களும் அவர்களுக்கு பக்கபலம்' என்றார்.

இளைஞர்கள் கெக்கலித்தார்கள்.

'பாட்டையா, அது அந்தக்காலம்! இப்போ காலம் மாறிப் போச்சு, அரசும் மாறியிருக்கு, மக்களுக்கு நன்மை செய்யவே பிறந்த கட்சியும், மக்கள் உள்ளத்தில் இடம் பெற்றிருக்கிறவர் களும் ஆட்சிக்கு வந்து விட்ட காலம் இது! என்றார்கள்.

'இருக்கட்டுமே! எந்தக் காலத்திலும், ஆட்சி புரிகிறவர் களை ஆட்டுவிக்கிற சக்தி பெற்றிருப்பது பணம்தான்' என்றார் திரு. அனுபவம்.

இளைஞர்கள் அவரை அலட்சியமாகப் பார்த்துவிட்டு, மிடுக்காகப் போனார்கள்.

போனதுபோல் திரும்பி ஊர் சேர்ந்தார்கள். அவர்கள் தலைநிமிர்ந்திருக்கவில்லை. குரல் எடுப்பாக ஒலிக்க வில்லை.

'என்ன? என்ன ஆச்சு? என்ன விஷயம்?'

ஒரே பொருளைக் குறிக்கும் பலப் பல கேள்விகள் அவர்களைச் சூழ்ந்தன.

'என்ன! மாண்புமிக்கவர்களை சந்திக்க இயலவில்லை. முக்கியமான மந்திரி தலைநகரில் இல்லை. அவர் ரொம்ப பிஸி, ரொம்ப ரொம்ப பிஸி. ஏகப்பட்ட திறப்பு விழாக்கள்; எங்கெங்கோ மாநாடுகள்! எண்ணிலாச் சொற்பொழிவுகள்! அவருக்கு ஓய்வே கிடையாது. சம்பந்தப்பட்ட அதிகாரி ஒருவரிடம் நம்ம மனுவையும் கொடுத்து வைத்தோம். உரிய காலத்தில் பதில் வரும் என்று சொன்னார்கள்' என்றார் ஒருவர்.

'இன்னும் ஒன்றும் தெரிந்து கொண்டோம். கட்சிக்குப் பெரும் பலமாக இருந்து வருகிற பெரும் பணக்காரர் இந்தத் தொழிற்சாலையில் மேஜர் ஷேர் வைத்திருக்கிறார். அந்தப் பங்குதாரரே மந்திரி சபையிலும் பங்கு பெறத் தீவிர முயற்சிகள் செய்து வருகிறார்' என்று செய்திகள் கூறினார் இன்னொருவர்.

திருவாளர் அனுபவம் கர்வமாகச் சிரிக்கவில்லை. 'நடைமுறை உலகத்திலே பணத்துக்குத்தான் எப்பவும் வெற்றி. இது தெரிந்த சங்கதி ஆச்சுதே!' என்றுதான் முணுமுணுத்தார்.

'மாண்டேஜ் ஷாட்'

மூன்றாவது பெரிய 'கில்லன்' மிடுக்காக எழுந்து நின்று ஏகப்பட்ட புகை கக்கலாயிற்று.

அதன் திறப்பு விழா கோலாகலமாக நடைபெற்றபோது, உரிய முறையில் அதை இயக்கி வைத்த புதிய மந்திரி (அந்த ஆலையில் பெரும் பங்குகளுக்கு உரிமையாளர்) அந்த ஆலையின் சேவையையும், அதன் அதிபர்களின் பரோபகாரத்தையும் நாட்டுக்கும் அரசுக்கும் அவர்கள் ஆற்றிவரும் தொண்டையும் அதிகம் பாராட்டிப் பேசினார்.

சிவபுரம் மீதும், சுற்றியுள்ள கிராமங்கள் மீதும், வயல் வெளிகள் மீதும், எங்கும் எப்போதும் இருள் மேகம் மாதிரி சிமிண்டுப் புகை கவிந்து தொங்கியது.

'கில்லன்தான் இது. படித்தவர்கள் கில்ன் என்பார்கள் கில் என்றும் சிலர் உச்சரிப்பார்கள். கில் என்றால் கொல்வது கில்லன் என்றால் கொல்கிறவன் என்று நாம் தமாஷாகக் குறிப்பிடலாம். உண்மையில் சாதாரண மக்களைக் கொல்லுகிற பணக்கார வேலைதான் இது. கில்லன் என்றால் காளவாய் என்று அர்த்தம். நம்மை எல்லாம் உயிரோடு சுட்டெரிக்கிற காளவாய்தான் இது!' என்று திருவாளர் அனுபவம் புழுபுழுத்தார். 'புழுபுழுப்பு' அவருடைய பொழுதுபோக்கு மாத்திரம் அல்ல. அவரது வாழ்க்கையே அதுவாக அமைந்திருந்தது!

அழகை இழந்திருந்த சிவபுரம் தன் அமைதியையும் இழந்துவிட்டது இப்போது. □

# வாழ்க்கை நாடகம்

'ஹல்லோ' என்னை தெரிகிறதா?'

அருகில் வெடித்த திடீர் கேள்வி சுந்தரத்தைத் திரும்பிப் பார்க்க வைத்தது. பஸ் நிலையத்தில் காத்திருந்தார் அவர்.

புன்முறுவல் பூத்தபடி அவர் பக்கத்தில் நின்ற நபரை சட்டென அவரால் இனம் கண்டு கொள்ள இயலவில்லை. யார் இது, இதுக்கு முன்னே இந்த ஆளை எங்கே பார்த்திருக்கிறேன் என்று மனம் குறுகுறுத்தது.

ஒல்லியாய், நெட்டையாய் தோன்றிய அவன் சிரித்தான். 'தெரியலியா? நாராயணன். ரெட்டை மண்டை—அதுதான் டபிள்ஹெட்—பெருமாள்சாமி வகுப்பில் நாம ஒண்ணாகப் படிச்சோமே. சொக்கலிங்கம், ராமையா விநாயகப் பெருமாள்...'

நினைவின் ஸ்விச்சை தட்டிவிட்டான் அவன். சுந்தரத்தின் மனக்குகையில் வெளிச்சம் பிறந்தது. அங்கே மக்கிக் கிடந்த சாயைகள் பல புரண்டன; நெளிந்து கொடுத்தன.

'அடடே, நாராயணனா? குட் ஓல்ட் ஃப்ரண்ட் நாராயணன்! இறந்த காலமே உயிர்பெற்று எதிரே வந்து நிற்பதுபோல் இருக்குது உம்மைப் பார்க்கையிலே, ஆளு அடையாளமே தெரியலியே. ஒரேயடியா மாறிப் போயிருக்கீரே என்று சுந்தரம் உற்சாகமாகப் பேசினார்.

'இருக்கலாம்' இருபது முப்பது வருடங்கள் ஓடியிருக்கு. வாழ்க்கைச் சுழலில் சிக்கி, அடிபட்டு—எவ்வளவோ அனுபவங்கள்; மோதல்கள் சிலவெற்றிகள். நிறையத் தோல்விகள்! எல்லாம் தங்கள் கவடுகளை உடம்பிலே

பதித்துவிட்டுப் போயிருக்கும். ஆனாலும், நீர் முன்னே மாதிரியேதான் இருக்கிறீர்னு ராமையா சொன்னான். அது சரியாத்தான் இருக்கு.'

இதைச் சொல்லிவிட்டு நாராயணன் உரக்கச் சிரித்தான்.

'எதிர்பாராத அபூர்வ சந்திப்பு. இதைச் சிறப்பாகக் கொண்டாட வேணும். ஓட்டலுக்குப் போகலாம் வாரும்; என்று கூறி சுந்தரம் நகர்ந்தார்.

'ஆமாம், விசேஷ விருந்து வைத்தே கொண்டாடலாம். ரொம்ப காலத்துக்குப் பிறகு இப்போ சந்திச்சிருக்கோம். இனிமேல் எந்தக் காலத்திலே சந்திப்போமோ?' என்றான் நாராயணன்.

இருவரும் ஓட்டலில் வசதியான இடத்தில் அமர்ந்து சாவகாசமாக சிற்றுண்டி சாப்பிட்டபோதே, பேச்சு விருந்தும் பரிமாறிக்கொண்டார்கள். தங்களின் இளம்பருவத்து சிநேகிதர்கள் பற்றி, அவர்களுடைய பிற்கால வாழ்க்கை பற்றி, யார்யார்; எப்படி எப்படி மாறிப்போயிருந்தார்கள் என்பது பற்றி, கடந்துபோன வருடங்களில் யார்யாரைச் சந்திக்கநேர்ந்தது என்பது பற்றியெல்லாம் சுவாரஸ்யமாகப் பேசினார்கள். எதிர்பாராத தகவல்கள் பல சுந்தரத்துக்குக் கிடைத்தன.

'உம்மாலே நம்பவே முடியாது. நம்ம கந்தப்பன் போலீஸ் இன்ஸ்பெக்டராகச் சேர்ந்து, வெற்றிகரமாகப் பணிபுரிந்து, பதவி உயர்வெல்லாம் பெற்றுவிட்டான்...'

'அப்படியா? ஆச்சர்யமா இருக்குதே. அப்போ ஆளு நைய்யின்னு இருப்பானே! ஏதோ முகம் நல்லா இருந்துது உயரமா வளர்ந்திருந்தான். வீக் பாடிதான்...' சுந்தரம் நினைவுகூர்ந்தார்.

'அது அந்தக் காலத்திலே. அப்புறம் ஆள் ஜம்னு ஆயிட்டான். இப்பொ அவனும் அவன் ஜபர்தஸ்துகளும்-

ஏயப்பா! நம்ம பழைய கந்தப்பனா இவன்னு திகைச்சுப் போவிரு திகைச்சு!' என்று நாராயணன் விவரித்தான்.

அதே போல, சுந்தரம் எதிர்பார்த்திராத விஷயம் நடராஜனின் வாழ்க்கைப் பற்றியது. பள்ளிக்கூடத்தின் மிகப் புத்திசாலி மாணவன். வகுப்பில் முதல்மார்க் வாங்குவான். வாத்தியார்களனைவரும் பாராட்டிய நன்மாணாக்கன். அவன் மேல்படிப்பு படித்து, பட்டங்கள் பெற்று, வாழ்க்கையில் ரொம்பவும் பிரகாசிப்பான் என்று ஆசிரியர்கள் அடிக்கடி கூறினார்கள். ஒவ்வொரு வகுப்பிலும் பரிசுகள் பல 'அவனுக்குக் குத்தகை' என்று அநேகர் சொல்வது வழக்கம். அவ்விதம், வருடந்தோறும் ஆங்கிலம் முதலாவது பரிசு, தமிழ் முதல் பரிசு, இதர பாடங்களில் ஒரு பரிசு அவனுக்கே போய்ச் சேரும். வாழ்க்கையில் அவன் என்ன ஆனான்? சர்வீஸ் கமிஷன் பரீட்சை எழுதித் தேறி, சப்ரிஜிஸ்திரார் ஆபீஸ் குமாஸ்தாவாய் பணியாற்றிக் கொண்டிருந்தான்... பத்திரங்களைப் பார்த்து நகல் எடுத்து நாளோட்டுகிற வேலை...

'நான் அவனை, டவுனுமில்லாத பட்டிக்காடாயுமில்லாத, இரண்டும் கெட்டான் ஊர் ஒன்றிலே அந்த நிலைமையில் பார்த்தபோது, அவனுக்காக அனுதாபப்பட்டேன்' என்று நாராயணன் தெரிவித்தான்.

அது சரிதான். வாழ்க்கை பொதுவாக மனிதர்களை வஞ்சித்துவிடுகிறது. காலம் மக்களை தன் இஷ்டம்போல் ஆட்டிப்படைக்கிற பொம்மைகளாக இயக்குகிறது. ஒரு சிந்தனையாளன் சொன்னானே, மனிதவாழ்க்கை கலைத்துப் போடப்பட்ட சீட்டுக் கட்டுபோல் தாறுமாறாகச் சிதறுண்டு கிடக்கிறது என்று. அது சரியான கூற்று...

சுந்தரத்தின் மனம் எண்ண அசை போட்டது. அவருக்கு விக்டரின் ஞாபகம் வந்தது.

பள்ளிக்கூடத்து விளையாட்டு வீரன். பெரிய ஹாக்கி சாம்பியன். இந்தியாவிலேயே சிறந்த ஆட்டக்காரனாக வரவேண்டும் என்பது அவனது ஆசை. அதற்காகப் பயிற்சிகள் செய்து கொண்டிருந்தான். கனவுகள் வளர்த் தான். அப்படியே அவன் வளர்ந்திருக்கக் கூடுமோ என்னவோ! வாழ்க்கை அவனுக்கு வாய்ப்பு அளிக்கவில்லைக் பாவம். மாவட்ட விளையாட்டுப் போட்டி ஒன்றின்போது, எதிர்க்கட்சி முரடன் ஒருவன் விக்டரின் காலைக் குறிவைத்து முரட்டுத்தனமாக மட்டையால் அடித்தான். விக்டருக்கு எலும்பு முறிவு ஏற்பட்டது. ஏதோ கோளாறாகி, அவன் கால் விளங்காமல் போய்விட்டது. விளையாட்டு மைதானம் பக்கமே அவன் தலைகாட்ட முடியாமல் ஆகிவிட்டது.

சில பேருக்கு வாழ்க்கை ரொம்பவும் உதவி செய்கிறது என்று நாராயணன் சொன்னான். சோப்ளாங்கி சுப்பு கண்கண்ட உதாரணம் என்றான்.

சுப்பு, வெறும் சோப்ளாங்கி என்றே பள்ளிக்கூட காலத்தில் எல்லோரும் சொன்னார்கள். ஒவ்வொரு வகுப் பையும் அவன் அவசரப்பட்டுத் தாண்டி விடுவதில்லை. சாவகாசமாக இரண்டு வருஷம், மூன்று வருஷம் என்று தங்கித்தங்கியே மேலே போனான். 'மாப்பிள்ளைப் படிப்பு' என வாத்திமார்களே பரிகசித்தார்கள். அந்த அந்தஸ்து அவனுக்குக்கிட்டியது. மோட்டார் கம்பெனி முதலாளி ஒருவரின் மருகப்பிள்ளை ஆனான். அதன்பிறகு கேட் பானேன்? அவனே அந்த கம்பெனி முதலாளி ஆனான். பல பஸ்கள் பல ரூட்டுகளில் ஓடின. பணத்தை அள்ளிக் கொடுத்தன. அவன் பெரிய லட்சாதிபதி ஆகிவிட்டான். இளம்பருவ சிநேகிதர்கள் எதிர்பட்டால் அவனுக்குக் கண்ணே தெரியாது. யாரையும் கண்டு கொள்வதில்லை அவன்.

'அது சரி. நீர் என்ன செய்கிறீர்னு நான் கேட்கவே யில்லையே நீரும் சொல்லலெ! உம்ம விஷயம் என்ன?' என்று சுந்தரம் விசாரித்தார்.

'ஒகோன்னு ஒண்ணுமில்லே. ஒரு மாதிரியா ரோல் ஆகுதுன்னு சொல்லனும் ஆட்டைத் தூக்கிக் குட்டியிலே போட்டு, குட்டியை எடுத்து ஆட்டிலே போட்டு என்னென்ன உருட்டுப் புரட்டுகள் எல்லாமோ பண்ணி, வாழ்க்கையை ஒருதினுசா ஓட்டுறேன்னு சொல்லனும். ஊம்; பெரும் பகுதியை ஓட்டியாச்சு. இன்னும் எத்தனை காலம் இருந்து விடப் போறேன்! இப்பவோ பின்னையோ, இன்னும் சித்தெ நேரத்திலோ, எப்போ எமன் வந்தாலும் ஐயாவாள் ரெடி; எவரெடி-க்விக் மார்ச்னு தயாராக இருக்கேன்' என்று சொன்ன நாராயணன் உரக்கச் சிரித்தான்.

சுந்தரம், பில் பணத்தைக் கொடுக்கத் தயாரானதும், நாராயணன் சண்டை போடுவதுபோல் பாய்ந்து, பில்லை பறித்துக் கொண்டு, உரிய பணத்தை அவனே கொடுத்தான்.

'இது நல்லாயிராது. பிரதர், நான்தான் உம்மை அடையாளம் தெரிந்து, வலிய்வந்து நட்பு கொண்டாடினேன். விசேஷமான விருந்து தேவை என்றேன் நான் பணம் கொடுப்பதுதான் முறை, ஒழுங்கு, நியாயம் எல்லாம். இல்லேன்னு சொன்னா, நான் டிபனுக்கு அலந்துபோய் உம்மை தூண்டி விட்டதாக ஆகிவிடும்' என்று லெக்சரடித்தான்.

இருவரும் மறுபடியும் பஸ் நிலையத்தை நோக்கி நடந்தபோது, தங்களுக்குத் தெரிந்தவர்களின் திருமண வாழ்க்கையைக் குறித்து பேசினார்கள்: ஒன்றிருவர் குடும்ப வாழ்வில் நிறைவும், சந்தோஷமும் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். பலபேர்களது இல்லறவாழ்வு சராசரித்தனமாகத்தான் இருந்தது. பிள்ளைகள், பிடுங்கல்கள், செலவுகள், சச்சரவுகள், பணம் பற்றாக்குறை, ஊடல்கள்—கூடல்கள் என்று. சிலர் அளவு மீறிக் கடன் வாங்கி, வெளிச்சம் போட்டு மற்றவர்களை ஏமாற்றுவதோடு, தாங்களும் ஏமாந்து கொண்டிருந்தார்கள். சிலபேருக்கு மனைவி இறந்துபோனாள்; அல்லது மனபேதம் காரணமாகப்

பிறந்த வீட்டிலோ, வேறு எங்காவதோ போய் சரண் புகுந்திருந்தாள்.

‘உம்ம கேஸ் எப்படியோ?’ என்று சுந்தரம் கேட்கவும், நாராயணன் சிரித்தான்.

‘அவள் சினிமா மோகம் கொண்டு அலைந்தாள். சதா சினிமா பற்றியும்—சினிமாக்காரர்கள் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தாள். நாடகக்காரன் ஒருவன் அறிமுகமானான். அவன் உதவியால் முன்னேற முடியும் என்று நம்பி, அவன் வீட்டைவிட்டுப் போய்விட்டாள். அவ்வளவுதான்’ என்று சர்வசாதாரணமாகச் சொல்லி முடித்தான்.

‘ஏன் சொந்த விஷயம் பற்றி இவனிடம் கேட்டோம்’ என்ற மன அரிப்பு சுந்தரத்துக்கு ஏற்பட்டது. இருவரும் விரைவிலேயே பிரிந்தனர். விலாசங்களை எழுதி வைத்துக் கொண்டுதான்.

ஆனாலும் ‘ஏதோ தற்செயலாக சந்திப்பு நிகழ்ந்து விட்டது. இனி எங்கே, எப்போ சந்திக்கப் போறோம்!’ என்று சுந்தரம் எண்ணினார். இதே மாதிரித்தான் நாராயணனும் நினைத்துக் கொண்டு போவான் என்ற எண்ணமும் மனசில் ஊர்ந்தது.

வாழ்க்கை விசித்திரமானது; அது மனிதரை எப்படி எப்படியெல்லாமோ பாதிக்கிறது. ஒவ்வொரு விதமாக அது பாதித்து வருகிறது என்று அவர் நினைத்தார்.

இந்த நாராயணனுக்கு ‘நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது’ என்று அவனை அறிந்த எல்லோருமே உறுதியாகச் சொன்னார்கள். அவன் நல்ல திறமைசாலி. ‘மூளைபிரதர்’ புதியபுதிய ‘ஐடியா’கள் அடிக்கடி அவனுக்கு உதயமாகும் என்றெல்லாம் அவன் நண்பர்கள் பாராட்டுரைக் கூறுவது வழக்கம்.

சு—2

எதிர்காலத்தில் நாராயணன் ஒரு ஆராச்சியாளனாக வருவான் என்று சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். நாவல்கள் படைக்கக் கூடிய எழுத்தாளன் ஆவான் என்று ஒன்றிரண்டு பேர் சொன்னார்கள். எப்படியோ அவன் வாழ்க்கை ஒளி மயமாக விளங்கும் என்று அனைவரும் நம்பினார்கள்.

எல்லோரும் 'எதிர்பார்த்தபடி நாராயணன் 'ஒளி நிறைந்த எதிர்காலத்தை' ஏற்றுக்கொண்டதாகத் தெரிய வில்லையே! அவன் வாழ்க்கை 'டிம் அடிச்சு'த்தான் காணப் படுகிறது என்று சுந்தரம் கருதினார்.

இருந்தாலும், வறட்சிநிலை இல்லையென்று தெரிகிறது. பணப்புழக்கம் இருக்கும் என்றே தோனுது. ஓட்டலுக்கு அழைத்துப் போய் விருந்து உபசாரம் செய்யத் தயங்க வில்லையே அவன். பின்னே என்ன!—சுந்தரம் திருப்திப் பட்டுக் கொண்டார்.

அவர் போக வேண்டிய இடத்துக்குப் போய், முடிக்க வேண்டிய அலுவலை முடித்துவிட்டு, பஸ் நிலையத்துக்குத் திரும்பியபோது மாலைவேளை ஆகியிருந்தது.

எங்கும் கூட்டமும் நெருக்கடியும்—போக்குவரத்துப் பரபரப்பும் காணப்பட்டன.

பஸ் நிலையமும் அதன் சுற்றுப்புறமும் வர்ணங்கள் மலிந்த, ஜீவ இயக்கம் மிகுந்த, தனி உலகமாக காட்சி யளித்துக் கொண்டிருந்தது.

திடீரென்று ஒரு இடத்தில் பரபரப்பு மிகுந்தது. கூச்சல் எழுந்தது. கும்பல் அதிகரித்தது.

சுந்தரத்தின் கவனமும் அந்தப் பக்கம் சென்றது. என்ன விஷயம், பார்க்கலாமே என்று அவரும் அங்கே நகர்ந்தார்.

'திருட்டுப்பயல்...வசமா மாட்டிக் கொண்டான்'

'எவ்வளவு துணிச்சல் இருக்கணும் அவனுக்கு!'

'ரொம்ப சாமர்த்தியமா வேலை செய்தானய்யா' இவ்வாறு ஒலித்தன பலகுரல்கள்.

'என்ன தந்திரம் பாரேன். கைப்பையும் நாகரிகத் தோற்றமுமாய் இருந்த ஒரு ஆளின் முதுகில் சேற்றையோ; எதையோ நைஸா அள்ளிப் போட்டிருக்கிறான். பிறகு நல்லவன் மாதிரி ஸார் உங்க சட்டையிலே ஏதோ அசிங்கம் பட்டிருக்கு ஸார். செச்சே, நல்ல டிரஸ் இப்படி அசிங்கமாப் போச்சே, நீங்க எப்படி ஸார் இதோட போக முடியும்னு அனுதாபப்பட்டிருக்கான். நாகரிக நபர், தலையைத் திருப்பி, சட்டையைப் பார்த்து, முகம் சுளித்து, பக்கத்திலிருந்த குழாய் அருகே போனான். பையை கீழே வைத்து விட்டு, சட்டையைக் கழட்டி, தண்ணீர் எடுத்து, அசிங்கம் பட்ட இடத்தை சுத்தம் செய்வதில் சிரத்தை காட்டினான். அந்த சமயம் இவன் பையை எடுத்துக் கொண்டு கும்பலில் கலந்துவிடுவதற்கு அவசரப்படவும், அதுக்குள்ளே பைக்காரன் கவனித்து, திருடன்; திருடன்; அதோ அந்த நெட்டையன் தான், என் பையை தூக்கிக்கொண்டு போறான் என்று கூவிக்கொண்டே அவன் பின்னாலே ஓட, பலரும் அவனை துரத்தியிருக்கிறார்கள் அவன் பிடிபட்டான். சரியானபடி அடியும்-உதையும் கிடைத்தது. போலீசும் வந்து விட்டது.

இவ்விவரம் பலரது பேச்சுக்களிலிருந்தும் சுந்தரத்துக்குக் கிட்டியது. அப்படிச் செய்த தந்திரசாலியைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலோடு, முயன்று கும்பலின் இடையே நெருங்கி மோதி எட்டிப் பார்த்தார் சுந்தரம். திடுக்கிட்டுத் திகைப்படைந்தார்.

நாராயணன்தான் அவன்!

அவர் கண்களையே அவரால் நம்ப முடியவில்லை ஒரு கணம். விரல்களால் கண்களை துடைத்து விட்டு நன்றாகக் கவனித்தார்.

அவனேதான். அவன் பார்வையும் அவர் முகத்தைத் தொட்டது. உடனடியாக அவன் தன்முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டான்.

வாழ்க்கையின் விசித்திர விளையாட்டை புரியவைக்கும் மற்றொரு சம்பவம்தான் இதுவும் என்ற எண்ணம் சுந்தரத்தின் மனசில் வெடித்தது இப்போது. □

# மனம் வெளுக்க...

சிவசிதம்பரம் பெருமூச்சு உயிர்த்தார்.

ஒரு பிரச்சினை தீர்ந்ததை நினைத்து அவர் நெஞ்சு உந்திய நெடுமூச்சுதானா அது...? அல்லது, மேலும் எதிர் நோக்கி நின்ற புதிய பிரச்சினைகளை மனம் அசை போட்டதால் எழுந்த அனல்மூச்சுதானோ என்னவோ!

அவர் மகள் கமலத்துக்கு ஒருமட்டும் கல்யாணம் முடிந்து விட்டது.

அந்த நினைப்பு 'அப்பாடா!' என்று ஒரு நிம்மதியை அவருள் கொண்டு சேர்த்தது உண்மைதான்.

கமலத்துக்குக் கல்யாணம்! எல்லாருக்கும் மகிழ்ச்சி அளித்த பெரிய விஷயம். கமலத்துக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம் தந்த நிகழ்ச்சி.

எதிர்பார்ப்புகளையும் ஆசைகளையும் தன்னுள் விதைத்து, அன்றாடம் பசுமைக் கனவுகளை அறுவடை செய்துவந்த பெண் உள்ளம், காலஓட்டத்தில் கூம்பிக் குவிந்து ஏக்கப் பெருமூச்சுகளை விட்டுக் கொண்டிருக்கும்படியான சூழ்நிலையே வளர்ந்தது. தனக்கும் கல்யாணம் என்று ஒன்று நடக்குமா என்று அவள் குமைய நேர்ந்தது.

'கமலத்துக்கு இன்னும் கல்யாணம் பண்ணாமல் வீட்டோடு வைத்திருக்கிறீர்களே!' என்று வக்கணை கொழித்தார்கள் அக்கம் பக்கத்தினரும், உற்றார் உறவினரும்.

அவர்களுடைய, மற்றும் சமூக மனிதர்களுடைய சின்ன மனசை, 'சிறியதோர் கடுகு உள்ளத்தை,' சுயநலத்தை,

பேராசையை, வியாபாரப் போக்கை சிவசிதம்பரம் சந்திக்க நேரிட்டது, கல்யாண முயற்சிகளின் போது.

'கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர்' என்று வாய்கிழியப் பேசுகிறார்கள். கல்யாண முயற்சியில் ஈடுபடுகிற போது, 'மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள்' லாப நோக்கம் கொண்டு வியாபாரிகளாக மாறிவிடுகிறார்கள். பேரம் பேசுகிறார்கள். ஓர் இடத்தில் பேசி, முடிவாகப் போகிற கட்டத்தில், மற்றொரு பெண்வீட்டுக்காரர் 'ஆயிரம் இரண்டாயிரம்' அதிகம் தருவதாக ஆசை காட்டியதும், மனிதத்தன்மையை காற்றிலே விட்டுவிட்டு, பணத்தாசை யோடு செயல்பட்டார்கள்...

இப்படி ஒன்றா, இரண்டா? 'புத்திக் கொள் முதல்' கணக்கில் வரவுகள் எத்தனை எத்தனையோ!

வருஷங்கள் ஓடின. கமலத்துக்கும் வயது அதிகரித்துக் கொண்டேயிருந்தது. அவளது புலப்பங்களும், பெருமூச்சு களும் பெருகின. அவள் அம்மாக்காரியின் முணமுணப்புகளும் தொணதொணப்புகளும் அமைதியைக் குலைந்தன.

சிவசிதம்பரம்தான் என்ன செய்வார், பாவம்! ஊர் ஊராக அலைந்தார். தெரிந்தவர்கள், வேண்டியவர்கள் என்று எல்லாரிடமும் சொல்லி வைத்தார்.

எப்படியோ ஓர் இடம் சித்தித்தது. பேரங்கள், வாக் குறுதிகள் வெற்றிகரமாக முடிந்தன. நகைகள், ரொக்கப் பணம், மாப்பிள்ளைக்கு 'ஸூட்டு வகையறா', கல்யாணச் செலவு என்று பல ஆயிரம்கள் பணம் தாள்களாகப் பறந்து மறைந்தன.

கன்னி கமலம். மணமகள் வேடம் தாங்கி கல்யாண நாடகத்தில் சந்தோஷமாக நடித்து, திருமதி சந்திரசேகரன் என்ற பதவி ஏற்று, 'மாப்பிள்ளை வீடு' போய்ச் சேர்ந்தாள்.

'மணமகளே மருமகளே வாவா!-உன் வலது காலை எடுத்து வைத்து வாவா!-குலமிருக்கும் குணம் இருக்கும் வாசல்

எங்கள் வாசல்...' என்று ஒலி பெருக்கிகள் ஓலமிட்டு வரவேற்றதில் ஒன்றும் குறைச்சல் இல்லை!

உரிய முறைப்படி பண்டபாத்திரங்கள், பலகார வகைகள் முதலிய சகல சீர்சிறப்புகளுடனும் அந்த வீட்டிலே கொண்டு கமலத்தை சேர்த்துவிட்டு வந்த சிவசிதம்பரம் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார் என்றால், அது நியாயமே யாகும்.

அந்த நிம்மதி அல்பாய்சானது என்பதை உணரும் சக்தி பெண்ணைப் பெற்ற பெரியவருக்கு அவ்வேளையில் இல்லை தான்.

அவருக்கு 'ஞானோதயம்' ஏற்படுவதற்கு வெரு காலம் தேவைப்படவில்லை.

இரண்டு, மூன்று மாதங்களிலேயே, 'குலமிருக்கும் குண மிருக்கும் வாசல் எங்கள் வாசல்' என்று பெருமை ஒலிபரப்பு பண்ணி, 'மருமகளே வா வா' என்று அழைத்த வீட்டில் குணக்கேடர்களே குடியிருந்தார்கள் என்பது புரிந்து விட்டது.

அம்மா பர்வதம் இனிப்பு வகைகளும் முறுக்கு சீடை திணுசுகளும் தயாரித்துக் கொண்டு, மலர்ந்த முகத்தோடு மகளைப் பார்க்கப் போனாள். மறுநாளே 'கொண்டை முடிந்து தொங்கப் போட்டது போல்' மூஞ்சியை 'உம்'மென்று வைத்துக்கொண்டு திரும்பி வந்தாள். அவளுக்குப் புலம்பு வதற்குப் புதிய விஷயங்கள் கூடைகூடையாய் கிடைத் திருந்தன...

கமலம் அங்கே சந்தோஷமாக இல்லை. மாமியார்காரி பெரிய தாடகை. மருமகளைப் படாதபாடு படுத்துகிறாள். மாப்பிள்ளைப் பையன் அம்மாப்பிள்ளை ஆக இருக்கிறான். நாம எவ்வளவோ செய்திருந்தும், அவங்களுக்குத் திருப்தி இல்லே... குறைகூறி, குத்திக்காட்டிக்கிட்டே இருக்கிறாங்

களாம். கமலம் அந்த வீட்டிலே சம்பளம் இல்லாத வேலைக் காரியாகத்தான் இருக்கிறாள். ஏகப்பட்ட வேலைகள். அப்படி வேலை செய்தும் நல்ல பெயர் இல்லே...

இந்த ரீதியில் பலப்பல சொன்னாள்.

கொல்லன் உலைத் துருத்தியைப் போல சிவசிதம்பரத் தின் நெஞ்சு அனல் பெருமூச்சை வெளியே தள்ளியது.

"நாமும் எவ்வளவோ பிரயாசைப்பட்டு, நல்ல இடமாக வலை போட்டுத் தேடினோம். கமலம் பெரியமனுஷி ஆகிப் பதினஞ்சு வருசம் ஆயிட்டுதே.... இன்னும் வீட்டோடு வைத்திருப்பது நல்லாயில்லை என்று, கிடைத்த இடத்தை முடிச்சோம். பையன் சுமாராப் படிச்சிருக்கான். தனியார் நிறுவனம் ஒன்றிலே சாதாரண வேலை ஒண்ணு பார்க் கிறான். பெரியதனங்கள் பண்ணமாட்டான்; பேராசைப்பட மாட்டான் என்று நினைத்தோம். அவனும் இந்த லெச்சணத் திலேதான் இருக்கிறான். என்ன பண்ண முடியும்? கமலத்தின் தலையெழுத்து இவ்வளவுதான்னு நினைத்துக்கொள்ள வேண்டியதுதான்..."

—சிவசிதம்பரம் இப்படி தனக்கும், தன் மனைவிக்கும் ஆறுதல் கூறிக் கொண்டார்.

ஒருநாள்-கமலத்துக்குக் கல்யாணமாகி ஆறேழு மாதங்கள் கழிந்தபோது— சிவசிதம்பரம் காலை உணவு சாப்பிட்டு விட்டு ஈஸிச்சேரில் சாய்ந்திருந்த சமயம் வாசல் கதவு தட்டப்பட்டது.

'யாரது?' என்று கேட்டவாறு, எழுந்துபோய், கதவைத் திறந்த சிவசிதம்பரம் அதிர்ச்சியும் ஆச்சர்யமும் அடைந்தார். அங்கே கமலம் கையில் ஒரு பையுடன் நின்றாள்.

'வா'என்றுகூட சொல்லத்தோன்றாமல், "என்னம்மா, நீ மட்டும்தான் வந்திருக்கியா? மாப்பிள்ளை வரலியா?" என்று விசாரித்தார் அவர். விலகி நின்று மகளுக்கு வழிவிட்டார்.

அம்மா பார்வதமும் அடுப்படியிலிருந்து வெளியே வந்தாள். மகளின் தோற்றமே அந்தத் தாயின் வயிற்றில் புளியைக் கரைத்தது, நெஞ்சில் பெரும் சுமையை ஏற்றி வைத்தது.

"என்ன கமலம், இப்படி ஆயிட்டே! ஆளை அடையாளமே தெரியலியே. மெலிஞ்சு கறுத்து..." என்று தாய் அங்கலாய்த்தாள்.

மகள் அவள் மீது சாய்ந்து, தோளில் முகம் புதைத்து விம்மினாள்.

என்னவோ, ஏதோ என்று பதறினர் பெற்றோர். அவளைத் தேற்றி, நல்லது கூறி மெதுமெதுவாக விசாரித்தார்கள்.

அவள் சொன்ன ஆறுமாதத்துக் கதையே ஒரு மகாபாரதமகா இருந்தது...

சந்திரசேகரன் நல்லபடியாக இல்லை. குடிக்கிறான். பணம் வைத்துச் சூதாடுகிறான். கமலத்தின் நகைகளைப் பிடுங்கிக் கொண்டு போய் அடகு வைத்து, சூதாடி பணத்தைத் தோற்றுவிட்டான். இப்போது கைவளையல்களைப் பிடுங்க வந்தான். அவள் கொடுக்க மறுத்தபோது, விறகுக்கட்டையால் அடித்தான். வளையல்களை முரட்டுத்தனமாகப் பிடுங்கிக் கொண்டு போனான்..

கமலத்தின் கைகள் வீங்கியிருந்தன. வலியிருந்தது முதுகிலும் அடி விழுந்த தழும்புகள்...

அவள் அழுது புலம்பிக் கொண்டிருந்தது மாமியாருக்குப் பொறுக்கவில்லை. 'துடைகாலி, துப்புக்கெட்ட மூதேவி, விடியாமூஞ்சி, தரித்திரப்பீடை, சனிப்பாடை, நீ அடி எடுத்து வைத்ததிலிருந்து இந்த வீட்டிலும் மூதேவி புகுந்துவிட்டது. என்மகனும் களை இழந்து, அழகு குலைஞ்சு, சீக்காளியாகி, சந்தோஷமே இல்லாமல் ஆகிப்போனான்' என்றெல்லாம்

ஏசலானாள். காசு வைத்துச் சீட்டாடிக் கொண்டிருந்த போது, போலீசார் வந்து சந்திரசேகரனையும் அவன் கூட்டாளிகளையும் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள். மாமியார்க்காரி பத்திரகாளி ஆகிவிட்டாள்! 'சூன்யம் புடிச்ச மூதி; சவம், நீ அழுது அழுதுதான் இந்த வீட்டிலே இருள் மண்டிப் போச்சு... நீ உங்க வீட்டுக்குப் போ' என்று ஏசி, கமலத்தைத் துரத்தி விட்டாள்.

—மகள் சொன்னதைக் கேட்டதும் சிவசிதம்பரம் துயரப் பெருமூச்சு உயிர்த்தார். அவரால் வேறு என்ன செய்ய இயலும்?

அவரைப் பார்த்துப் பேச வந்த அருணாசலம், வீட்டு நிலவரத்தை அறிந்து, சிவசிதம்பரத்துக்காக அனுதாபப் பட்டார்.

"பெண்ணுக்குக் கல்யாணம் முடிந்ததும் ஒரு பிரச்சினை தீர்ந்ததுன்னு சொன்னீங்க... சமூக நிலைமை அப்படி இல்லை. பெண்ணுக்குக் கல்யாணம் ஆவதற்கு முன்னாலும் ஏகப்பட்ட பிரச்சினைகளை பெற்றோர்கள் எதிர் கொள்ள வேண்டியிருக்கு. கல்யாணத்துக்குப் பிறகும் பல பல பிரச்சினைகளைச் சந்திக்க வேண்டியதாகிறது. உண்மையில், ஒரு பெண்ணின் கல்யாணம் அவள் வாழ்க்கையில் புதியபுதிய பிரச்சினைகள் புகுவதற்கு வழிசெய்யும் வாசலாகத்தான் இருக்கிறது" என்றார் நண்பர்.

"பெரிய படிப்பு படிச்சவன், பணம்— சொத்து-பெரிய வேலை எல்லாம் உடையவன் நம்ம நிலைமைக்குச் சரிப்பட மாட்டான். சாதாரணப் படிப்பும், சுமாரான வேலையும், மத்தியதர நிலையும் உள்ள ஒருவன் தனக்கு மனைவியாக வருகிறவளை நல்லபடியாகக் கவனித்துக் கொள்வான். கண்கலங்கும்படி செய்ய மாட்டான்னு எண்ணினேன். அவனும் மோசமாகத்தான் நடந்துகொள்கிறான்" என்று சிவசிதம்பரம் குறைப்பட்டுக் கொண்டார்.

"ஆண்மனம் என்பதுதான் இதுக்கெல்லாம் அடிப்படை. 'ஆண்' என்ற எண்ணமே சமூகத்தில் பெரும்பாலாருக்கு ஒரு திமிரை, கர்வத்தை, பேராசையை, பெண்ணை அடக்கி ஆளும் விருப்பத்தை, மனைவியை அடிமை போல் கருதும் போக்கை எல்லாம் தந்து கொண்டிருக்கிறது. பெண்ணை வாழ்க்கைத் துணையாக மதிக்கும் பண்பைவிட, பெண்ணைக் கொண்டு தனது அந்தஸ்தை உயர்த்திக் கொள்ள வேண்டும்— வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக்கொள்ள வேண்டும்— தனது சுகசவுகரியங்களையும் பலவிதமான தேவைகளையும் பூர்த்தி பண்ண வேண்டும் என்ற நினைப்பும் நடப்புமே ஆண்களிடம் காணப்படுகிறது. இந்த நிலைமை மாறினால்தான் பெண் சமூகத்தில் நல்வாழ்வு பெற முடியும். அதற்கு ஆண்களின் மனம் புனிதமுற வேண்டும். அப்படி மனம் வெளுப்பதற்கு மருந்தோ, மார்க்கமோ ஏதாவது உண்டோ?" என்றார் அருணாசலம். அவர் ஒரு மாதிரியான நபர் என்பது மற்றவர்களின் எண்ணம்.

அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த சிவசிதம்பரத்தின் உள்ளத்து அனல், நெடுமூச்சாக வெளிப்பட்டது.



# சாப்பாட்டு ராமன்

அஞ்சு வயசு மூக்கப் பயலுக்கு அந்த வட்டாரத்திலே அநேகம் பெயர்கள் ஏற்பட்டிருந்தன. 'குண்டோதரன்' 'சாப்பாட்டு ராமன்' 'உப்புமாக் கழுகு' 'தீக்கோழி' 'தோசைப் பேய்' என்றெல்லாம் பல பெயர்— ஒரு நபராக விளங்கும் பெருமை பெற்றிருந்தான் அவன். 'தாயம்மை பிள்ளை' என்றும் அவனைக் குறிப்பிட்டுப் பேசுவர்.

'உன் வயிற்றுக்குள்ளே என்னதான் இருக்குதோ! எவ்வளவு கொட்டினாலும், இன்னும் கொண்டுவா— கொண்டுவா என்று கேட்குதே அது. நீ சரியான குண்டோதரன் தான்' என்று அவன் அம்மா அடிக்கடி சொல்லுவாள். இருந்தாலும், அவன் வயிற்றுக்கு அவள் வஞ்சனை செய்யமாட்டாள்.

காலையில் பழைய சோறும் தயிரும் மரவை நிறைய எடுத்து வைப்பாள் அவள், தன் 'அருமை' மகனுக்கு. உடனேயே வாயில் ஒதுக்கிக் கொள்ள ஒரு துண்டு 'கருப்புக் கட்டி' வேண்டும் அவனுக்கு அப்புறம் முறுக்கு அல்லது சீடை, என்று எதையாவது சட்டைப் பையில் போட்டுக் கொண்டு திரிவான் அவன். சதா அவன் வாய் அரைத்துக் கொண்டே இருக்கும். பன்னிரண்டு மணிக்குச் சுடுசோறு.

சாப்பாட்டு நேரத்தில் சற்றே தாமதமாகி விட்டாலும், 'அம்மா, பசிக்குதே ... அம்மா வயிற்றைப் பசிக்குதே!' என்று சிணுங்கி, அவளைப் பஞ்சரித்துப் பாடாய்ப்படுத்துவான். வயிறு முட்டச் சோறு சாப்பிட்டாலும்கூட, அவ்வப்போது வேர்க்கடலை, பட்டாணி, உடைத்த கடலை, ஓமப்பொடி, மிக்ஸ்சர் என்று எதையாவது தின்று கொண்டே இருப்பதில் ஆர்வம் காட்டுவான் அவன்.

அதனால்தான் சில சமயங்களில் தாயம்மை, 'வா குண்டோதரா, வந்து கொட்டிக்கொள்' என்று கூப்பிடுவாள். எனினும் 'போதுமா? போதுமா?' என்று கேட்டும், 'இன்னும் கொஞ்சம் சாப்பிடடா' என உபசரித்தும் பரிமாறுவாள். தனது மகன் வயிறு வாடக்கூடாது என்ற கவலை தாய்க்கு இராதா என்ன?

மூக்கையாவின் சாப்பாட்டு ஆசையை உணர்ந்தவர்கள் அவனை 'சாப்பாட்டு ராமன்' என்று பரிகசித்தார்கள். தாயம்மை குடியிருந்த வீட்டுக்கு அடுத்த வீட்டில் ஒரு குடும்பம் வசித்தது. அவ்வீட்டின் தலைவருக்கு ஏதோ ஒரு கடையில் கணக்கு எழுதும் வேலை. அவருக்கு உப்புமா என்றால் ஆசை. ஆகவே வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் விரதம் அனுஷ்டிப்பார். விரத நாட்களில் காலையில் அல்லது இரவில் உப்புமா என்ற நியதி ஏற்படுத்திக் கொண்டிருந்தார் அவர். அந்த வீட்டில் உப்புமா தயாரிக்கும் வாசனை எழ வேண்டியதுதான்; மூக்கையா எங்கே இருந்தாலும் அங்கு ஆஜராகி விடுவான். அதுவும், பெரியவர் இலை முன் அமர்ந்திருக்கும் சரியான சமயத்தில்! அப்புறம் என்ன செய்து? 'அந்தச் சனியனுக்கும் கொஞ்சம் கொடு. முதல்ரக உப்புமாக கழுகாக இருக்குதே இது. நம்ம வீட்டிலே உப்புமா கிண்ட வேண்டியதுதான்; இதுக்கு மூக்கிலே வேர்த்து விடுகிறது. விழுந்தடிச்சு இந்த தரித்திரம் இங்கே ஓடி வந்து விடுகிறது' என்று முணங்குவார் அவர். இதர சமயங்களிலும் அவர் அவனை 'உப்புமாக் கழுகு' என்றே குறிப்பிடுவார். அதே மாதிரித்தான் எதிர் வீட்டில் தோசை சுடுகிறபோதெல்லாம் மூக்கையா அங்கு சுற்றிச் சுற்றி வருவான். ஒரு தோசை கொடுத்தாலொழிய அங்கிருந்து நகரமாட்டான். அதனால் அவ்வீட்டினர் அவனை 'தோசைப் பேய்' என்று மதித்தார்கள்.

பக்கத்து வீட்டுப் பிள்ளைகள், தெருவில் உள்ள சிறுவர் சிறுமிகள் கையிலோ அல்லது பையிலோ என்ன

வைத்திருந்தாலும் சரி, அவர்கள் வாய் ஆடுவது தெரிந்ததும் ஓடி வந்து விடுவான் மூக்கையா. 'ஏய் ஏய், எனக்கு இல்லையா?' என்று தயவாகக் கேட்பான். 'எனக்குக் கொஞ்சம் கொடுடா' என்று கெஞ்சுவான். 'கொடுக்க மாட்டியா? டேய் டேய், இருக்கட்டும்டா! கொடுடான்னா...' என நச்சரிப்பான். கொடுக்காவிட்டால், கையைத் தட்டிவிட்டு, கீழே விழுவதை எடுத்துக் கொள்வான். பைக்குள் கையைப் போட்டு, அகப்பட்டதை அள்ளி வாயில் திணித்துக்கொண்டு குதிப்பான். எனவே அவனை 'குரங்கு' 'தீக்கோழி' என்றெல்லாம் இதர பிள்ளைகள் பழித்தனர்.

மூக்கையாவுக்கு வேலையும் வாழ்வின் லட்சியமும் சாப்பிட்டுக்கொண்டே இருப்பதுதான். வீடு வீடாகத் திரிவதும் விளையாடுவதும் பொழுது போக்க உதவும்.

'இந்த மக்கு ஒரு எழவுக்கும் பிரயோசனமில்லை. சரியான எருமைமாடு இது. எப்படித்தான் உருப்படப்போகுதோ, எனக்குப் புரியவில்லை!' என்று தாயம்மை அடிக்கடி அலுத்துக் கொள்வாள்.

அவளுடைய அண்ணன் சிவசிதம்பரம் பிள்ளை 'கொஞ்சம் செயலானவர்'. சொந்த மளிகைக்கடை, இரண்டு பசுமாடுகள், மூன்று வீடுகள், போதுமான நிலம் எல்லாம் அவருக்கு உண்டு. குழந்தைகளும்— ஒரு ஆணும் ஒரு பெண்ணும்— இருந்தன. பையன் செல்லய்யாவுக்கு நான்கு வயசு பூர்த்தியாகிவிட்டது. பெண் சிவகாமிக்கு மூன்று வயது.

சிவசிதம்பரம் பிள்ளைக்கும் அவர் மனைவி ஜானகிக்கும் குழந்தைகளைப் பற்றிய மனக்குறை ஒன்று இருந்தது. பிள்ளைகள் இரண்டும் நன்கு வளராமல், 'கஞ்சிக்கு இல்லாதவன் வீட்டுக் குழந்தைகள் மாதிரி' மெலிந்தே காணப்பட்டன. காரணம், அவை நன்றாகச் சாப்பிடுவது கிடையாது.

நெய்யும் பருப்பும், பாலும் தயிருமாக நிறைய நிறையக் கலந்து வைத்தாலும் குழந்தைகள் தின்பதில்லை. பெரியவன். தட்டுமுன்னால் உட்கார்ந்து, ஒவ்வொரு பருக்கையாக எடுத்து வாயில் வைத்து ருசி பார்ப்பான்.

'என்ன இவன் இப்படி குருவி கொரிக்கிற மாதிரிக் கொரிக்கிறான். இப்படிச் சாப்பிட்டால், இது எங்கே உடம்பிலே ஒட்டும்?' என்று ஜானகி கூறுவாள். 'சோறு சீதேவிடா. சோற்று முன்னாலே உட்கார்ந்து இதுமாதிரி ஆக்கங்கெட்டத்தனமாக நடந்து கொள்ளாதே!' என்று கோபிப்பாள் சிலசமயம். ஆயினும் அவன் போக்கு மாறுவதாயில்லை.

அண்ணனைப் பார்த்துப் படித்த வழக்கம்தானோ என்னவோ, குழந்தை சிவகாமியும் சோற்றை அளைவதும், விரல்களால் எடுத்து நெடுகிலும் விசிறி அடிப்பதும், வாயில் ஊட்டினால் தூ—தூ என்று துப்புவதுமாகச் செயல்புரிந்து வந்தாள். தனது போக்கில் அவள் விசேஷ ஆனந்தம் அடைந்ததாகவே தோன்றியது.

நோயின் கோளாறாக இருக்கலாம். இது என்று பெற்றோர்கள் வைத்தியர்களைக் கூப்பிட்டுக் காட்டினார்கள் அவர்களும் ஏதேதோ மருந்து கொடுத்துவிட்டு போனார்கள். எனினும் குழந்தைகள் தேறவே இல்லை.

'காற்று—கறுப்பு—தோஷம்' என்று ஜானகி கூறினாள். விபூதி மந்திரித்துப் போடவும், தாயத்து கட்டவும் அநேகருக்கு அவள் பணம் செலவு பண்ணினாள். ஆயினும் பலன்தான் எதுவும் ஏற்படவில்லை. தனது பிள்ளைகள் மெலிந்து சோகை பிடித்தவைபோல் இருக்கின்றனவே என்ற கவலையும் அவளை விட்டு நீங்கியபாடில்லை.

* * *

ஸ்ரீயம்மை அண்ணன் வீட்டுக்கு விருந்தாக வந்து சேர்ந்தாள். இடம் மாற்றம் மூக்கையாவுக்கு இன்பம் அளித்தது என்றாலும் அவனுக்கு நஷ்டமாகவே அமைந்தது.

சொந்த வீட்டில் நினைத்த வேளையில் இஷ்டம்போல் தின்ன முடியும். விருந்துக்கு வந்த இடத்தில் அது சாத்தியப் படுமா? அவன் வேளா வேளைக்கு நிறையச் சாப்பிடுவதைக் கண்ட ஜானகி அம்மாளுக்குப் பொறாமை ஏற்பட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

'இப்படிச் சாப்பிடப்படாதம்மா இது தரித்திரம்!' என்று அவள் மனம் பேசியது. 'நம்ம குழந்தைகள் வயிற்றுக்குப் போதுமானபடி சாப்பிடவே மாட்டேங்குது. இந்தக் கரிக்குரங்கு எங்கே எங்கேன்னு பறக்குதே!' என்று எண்ணினாள் அவள்.

தனது பற்றாக்குறை உணவுப் பொருள்களை எவ்வாறு ஈடு செய்யலாம் என்ற யோசனையிலேயே மூக்கையா பொழுதைக் கழித்து வந்தான். அவன் கைவரிசையை செல்லய்யாவிடமும் சிவகாமியிடமும்தானே காட்டமுடியும்?

செல்லய்யாவிடம் கெஞ்சிக் கேட்டும் கைநீட்டிப் பெற்றும் கிடைத்ததை எல்லாம் தன் வாயில் போடலானான் மூக்கையா. சிவகாமி முன்னால் ஏதாவது இருந்தால் அவன் தாராளமாக எடுத்துக் கொள்ளத் துணிந்தான்.

அவ் இரண்டு குழந்தைகளுக்கும் அவன் செயல் வேடிக்கையாகப்பட்டது முதலில். அவன் இரண்டு மூன்று இட்டிலிகளை விழுங்குவதும், தட்டில் போடப்படுகிற சோறு முழுவதையும் தீர்த்துக் கட்டுவதும் அதிசயிக்கத் தகுந்த 'சர்க்கஸ் வித்தை' போலவே தோன்றின.

ஒருநாள் மாலை வேளையில் வடை செய்தார்கள். மூக்கையாவுக்கு இரண்டு கொடுத்துவிட்டு, மற்ற இரு குழந்தைகளுக்கும் தட்டில் வடைகளை வைத்தாள் ஜானகி.

செல்லய்யாவும் சிவகாமியும் வடைகளை எடுத்துத் தின்னாது, விரல்களால் உருட்டிப் புரட்டி விளையாடிக் கொண்டிருந்தார்கள். தன் பங்கைத் தின்று தீர்த்துவிட்ட மூக்கையா, 'என்ன சிவகாமி, உனக்கு வடை வேண்டாம்.

அப்படித்தானே?' என்றான். அச்சிறு குழந்தையின் பதிலுக்காகக் காத்திராமலே வடைகளை எடுத்து 'அவக் அவக்கென்று' விழுங்கினான் அவன்.

சிவகாமி அவன் முகத்தையே—வாயையும் அதன் அசைவுகளையும்—கவனித்துக் கொண்டிருந்தாள். அழலாமா, அழாமல் இருப்பதா? அதுதான் பிரச்னை அவளுக்கு அந்த நேரத்திலே!

மூக்கையா அடுத்தபடியாக செல்லய்யாவை நோக்கினான். 'என்னடே, உனக்கு வடை பிடிக்காதோ? கையிலேயே வச்சிருக்கியே?' என்று கேட்டுக் கை நீட்டினான்.

செல்லய்யா 'அம்மா, இவனைப் பாரு!' என்று கத்தினான்.

'என்னடா, என்ன?' என்று குரல் கொடுத்தாள் ஜானகி.

'இவன் என் வடையைப் பிடுங்கித் தின்னப் பார்க்கிறானம்மா' என்று இழுத்தான் பையன்.

'அதுக்கு முன்னாடி நீ தின்னுபோடு. அப்புறம் அவன் எடுக்கமாட்டான்' என்றாள் அம்மா.

அவனும் அவசரம் அவசரமாக தின்று முடித்தான்.

அதன் பிறகு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இதுவே நிகழ்ந்தது. மூக்கையா பிடுங்கித் தின்றுவிடுவான் என்று பயந்து, செல்லையா தன் பங்கைச் சாப்பிடுவதில் ஆர்வமும் அக்கறையும் காட்டலானான். சில தடவைகள் பறிகொடுத்து விட்டு, 'பேந்தப் பேந்த விழித்த' அனுபவம் காரணமாக சிவகாமியும் பாடம் படித்துக் கொண்டாள். தனக்கு அளிக்கப்படும் உணவைப் பாதுகாப்பதற்கு ஒரே ஒரு வழி தான் உண்டு; அதைச் சீக்கிரம் தின்றாகவேண்டும் என உணர்ந்தாள் அவள். அதைச் செயல்படுத்துவதிலும் தீவிரமானாள்.

மூக்கையா தன் தாயுடன் ஊருக்குப் போய்விட்ட பிறகு கூட, இரு குழந்தைகளும் சாப்பாட்டில் கொண்ட ருசியையும் புதுப் பழக்கத்தையும் விட்டுவிடவில்லை. சிவகாமி எப்போதாவது முரண்டு பண்ணினால், 'ஓஸ், காக்கா கொத்திக்கிட்டுப் போய்விடும். சாப்பிட்டுவிடு கண்ணு!' என்று ஏய்ப்பு காட்டவேண்டிய அவசியம் நேரவில்லை. 'இதோ பாரு, மூக்கன் வாறான்!' என்று சொன்னாலே போதும். அவள் கைகளும் வாயும் வேகமாகச் செயல்புரியத் தொடங்கும்.

'மூக்கப்பயல் ஒரு மண்ணுக்கும் பிரயோசனப்பட மாட்டான்னு எண்ணினோமே. நம் குழந்தைகள் சாப்பிடக் கற்றுக்கொள்வதற்கு அவன் தானே துணை புரிந்தான்!' என்று ஜானகி தன் கணவரிடம் சொன்னாள்.

'உலகத்திலே எதுவும் பிரயோசனமற்றுப் போவதில்லை. சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும் என்று தெரியாமலா சொல்லி வைத்தார்கள் பெரியவர்கள்?' என்றார் சிவசிதம்பரம் பிள்ளை, மகா ஞானி போல. □

# எளிய காரியம்

செல்வநாயகம் வழக்கம்போல் பெரும்பேச்சு பேசிக் கொண்டிருந்தார். தன்னைப் பார்க்க வந்தவரிடம்தான்.

'நாம நம்ம பாட்டை பார்த்துக் கொண்டிருப்பது தானா வாழ்க்கை? நம்மாலான சேவைகள் செய்ய வேண்டியதும் அவசியம். எனக்கு ரொம்ப நாளாகவே இந்த எண்ணம் உண்டு. பிறருக்கு உதவிகள் செய்யனும். என்ன பணி புரிவது என்பதுதான் தெரியவில்லை. அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கிவிட்டால், இன்பநிலை தானே வந்து எய்தும் என்பது உண்மையிலேயே உன்னதமான குறிக்கோள்.'

'நீங்க சொல்வது சரிதான்' என்றார் அவருடைய நண்பர் சின்னசாமி.

'அன்பு அன்பை வளர்க்கும். அன்பற்ற உயிர்களிடம் அன்பாக இருப்பது நமக்கும் சந்தோஷம் தரும். இதை உணர்ந்து நடக்கிறவர்கள் எத்தனை பேர்?'

செல்வநாயகம் இதைச் சொல்லியபடி நண்பரை பெருமையாக நோக்கினார்.

அவர் செல்லமாக வளர்க்கும் நாய் ஓடி வந்தது. அவர் அருகில் நின்று வாலை ஆட்டியது. பக்கத்தில் காலியாக இருந்த நாற்காலியில் ஏறி உட்கார்ந்தது.

அதை அவர் பிரியமாகத் தடவிக் கொடுத்தார். அதில் மகிழ்ச்சி கண்டார்.

செல்வநாயகமும் நண்பரும் வெளியே கிளம்பினார்கள். வீட்டுத் திண்ணையில் எவனோ ஒருவன் உட்கார்ந்திருந்

தான். அவனைக் கண்டதும் செல்வநாயகம் ஆத்திரம் கொண்டார்.

'ஏன்டா இங்கே உட்கார்ந்திருக்கே? திருட்டுக் கழுதை! எழுந்து போடா, நாயே!' என்று எரிந்து விழுந்தார். அவனை விரட்டியபிறகே அவருக்கு திருப்தி வந்தது.

சிறிது தூரம் நடந்ததும், ரோடு ஓரத்தில் ஒரு கிழவி நிற்பதை அவர்கள் கண்டார்கள்.

'ஐயா, நான் அந்தப் பக்கம் போக வேண்டும். தனியா ரோடை கடந்து போக பயமாயிருக்கு. கொஞ்சம் உதவி பண்ணுங்க' என்று பணிவாக அவள் வேண்டினாள்.

சின்னசாமி அவள் கையைப் பிடித்து அவளை மெதுவாக அழைத்துப் போய் ரோடின் மறுபுறத்தில் விட்டு வந்தார்.

அவர் திரும்புகிறவரை காத்து நின்ற செல்வநாயகம் எரிச்சலுடன் சொன்னார்: 'சாக மாட்டாம அலையுதுக சனியனுக. வீட்டிலே விழுந்து கிடக்க வேண்டியது தானே! எதுக்காக இங்கே வரணும்? இப்படி அவதிப்படணும்? போறவாறவங்களுக்கும் தொந்தரவு!'

சின்னசாமி சிரித்துக் கொண்டார். அதன் பின் ஏதோ ஒரு குறிப்பு பதுங்கிக் கிடந்ததாகவே தோன்றியது.

ஒரு இடத்தில் தொழிலாளி ஒருவன் நின்று கொண்டிருந்தான். பெரிய மூட்டை ஒன்று தரையில் கிடந்தது. 'ஐயா மூட்டையை கொஞ்சம் தூக்கி விடுங்க. ஒரு கை கொடுத்து உதவுங்க!' என்று கெஞ்சலாக கேட்டான்.

'வேறே வேலை இல்லை போ!' என்று முணகியபடி முன்னேறினார் செல்வநாயகம்.

சின்னசாமி அந்த ஆள் மீது இரக்கம் கொண்டார். அவன் அருகில் சென்று, அவன் அந்த மூட்டையைத் தலைமீது தூக்கி

வைத்துக் கொள்வதற்கு உதவினார். அவன் நன்றியை முகத்தில் தேக்கி 'நல்லாருப்பீங்கய்யா' என்று கூறிவிட்டு நடந்தான்.

செல்வநாயகம் நண்பரை அனுதாபத்தோடு பார்த்தார் 'இப்படி இருக்கானே இவன் சுத்த அப்பாவியாக!' எனச் சொல்லாமல் சொன்னது அந்தப் பார்வை.

சின்னசாமி அவரை ஒரு மாதிரியாகப் பார்த்தார். சேவை, தொண்டு, பரோபகாரம், அன்பு என்பதெல்லாம் உமது பேச்சில் புரளுகிறது. எப்படி இதை எல்லாம் செய்வது என்று தெரியவில்லை எனப் புலம்புகிறீர். காமிராவும், பப்ளிசிட்டி சாதனங்களும் சூழ்ந்திருக்க, பெருமைக்காகப் பொதுநல சேவை புரிந்து மகிழ ஆசைப்படுகிற இனத்தைச் சேர்ந்தவர்தான் நீரும்! உண்மையான மனித நேயம் உமது உள்ளத்தில் ஊற்றெடுக்கவில்லை. இப்படி அவர் எண்ணினார். எனினும் இதை வாய்திறந்து நண்பரிடம் சொல்லவில்லை அவர்.

செல்வநாயகம் உற்சாகமாகப் பேசினார்: 'திருமூலர் அழகாகச் சொல்லியிருக்கிறார். யாவர்க்கும் எளிது பசுவுக்கு ஒரு கைப் புல் கொடுப்பது. யாவர்க்கும் எளிது இனிய சொற்களை வழங்குவது, இப்படி வரும். அந்தப் பாட்டு உமக்கு நினைவு இருக்கிறதா?'

'இல்லையே!' என்றார் சின்னசாமி. ஆனால் எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. யாவர்க்கும் எளிது பெரும் பேச்சு பேசிக் கொண்டிருப்பது என்று அவர் மனம் கூறியது; தனக்குள்ளாகத்தான்! □

# மாமா வந்த ஜோர்!

தூள் பட்டது அந்த வீடு.

பிள்ளைகள் குதித்துக் கூச்சலிட்டுக் கும்மாளி போட ஆரம்பித்தார்கள்.

பெரியவர்கள் சந்தோஷ மிகுதியால் ஆளுக்கு ஒன்று சொல்லத் தொடங்கி, ஒருவர் பேச்சில் மற்றவர் குறுக்கிட்டு, இரண்டு மூன்று பேர் ஏககாலத்தில் பேசி, எவர் பேச்சும் எவருக்கும் புரிபடாமல் ஆரவாரித்தார்கள்.

இதற்கெல்லாம் காரணம் தபாலில் வந்த ஒரு கடிதம் தான். பட்டணத்திலிருந்து வந்திருந்தது. அங்கு 'ஏதோ ஒரு பெரிய கம்பெனியில் என்னவோ வேலை' பார்க்கும் ராமலிங்கம், தேதி குறிப்பிட்டு, அந்த ஊருக்கு வருவதாக எழுதியிருந்தான்.

அவன் பட்டணத்தில் வேலை பார்த்துக் கொண்டிருப்பதே அந்த வீட்டாருக்கு ரொம்பப் பெருமையான விஷயம்தான். 'பட்டணத்திலே வேலை' 'நம்ம பையன் பட்டணத்திலே வேலை பார்க்கிறான்' என்று சொல்லிக் கொள்வதில் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் தனியானதொரு கர்வமும் சந்தோஷமும் அனுபவித்து வந்தார்கள். "என்ன வேலை?" என்று கேட்பவர்களுக்கு, 'ஏதோ ஒரு கம்பெனிலே வேலை. பெரிய வேலைதான், மாசம், அறுநூறோ, எழுநூறோ சம்பளம் வாங்குறான்' என்றுதான் அவர்கள் பதில் சொல்வார்கள். அப்படித்தான் சொல்ல முடியும் அவர்களால். இங்கிலீஷ் வார்த்தைகளால் ஆன அந்தக் கம்பெனியின் பெயரும், அது நடத்துகிற பிசினஸ் விஷயமும், அவன் வேலை விவரமும்— அவன்

அநேக தடவைகள் விளக்கிச் சொல்லியிருந்த போதிலும்— அவர்களுக்குப் புரியாத சங்கதிகள். தங்கள் வீட்டுப் பையன் ராமலிங்கம் பட்டணத்திலே வேலை பார்க்கிறான், நிறையச் சம்பாதிக்கிறான் என்கிற உண்மைகளே போதும் அவர்கள் சந்தோஷமும் பெருமையும் கொள்வதற்கு.

அந்த ராமலிங்கம் தான் ஊருக்கு வருகிறான். அதை அறிவிக்கும் கடிதம் அவர்களை உற்சாகம் கொள்ளும்படி செய்துவிட்டது.

—இன்னிக்கு தேதி என்ன? இருபதா? அவன் இருபத்தஞ்சாம் தேதியா வாறான்? அப்போ இன்னும் அஞ்சு நாள் தான் இருக்குன்னு சொல்லு! இன்னைய நாளைத் தள்ளிப்போட்டா, நாலே நாளுதான்... வாற கிழமையை ஏன் சேர்க்கிறே? அதையும் தள்ளு. ஊடே இருப்பது மூணே மூணு நாள்தான்... அது எப்படி? 20 போச்சு. முதல்லேயே அதைச் சேர்க்கலே. 21, 22, 23, 24, ஆக நாலு நாள் முதல்லியே நான் அவன் வாற நாளையும் சேர்க்கல்லே எப்படியும் இன்னும் நாலு நாள் கிடக்கு...

இந்த விதமாக ஆளுக்கு ஒன்று சொல்லி, கணக்குப் பண்ணினார்கள்.

பிறகு பேச்சு வேறு பாதையில் புரண்டது. ராமலிங்கம் மூன்று வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வாறான். அவன் எவ்வளவு பணம் சேர்த்து வைத்திருப்பான்? கையிலே எவ்வளவு எடுத்து வருவான்? இந்த ஊரிலே நிலம் வாங்கிப்போட, அந்தப் பணம் போதுமான அளவு இருக்குமா? இவ்வாறு வீட்டுப் பெரியவர்கள், ஆண்கள், பேசலானார்கள்.

பெண்களுக்கு வேறு கவலை. அவன் ரொம்பநாள் கழிச்சு வாறான். வாறவன் சும்மா வரமாட்டான். சாமான்கள் வாங்கி வருவான். ஒவ்வொருவருக்கும் தனித்தனியே ஏதாவது வாங்கியாருவான். அப்படி, யார் யாருக்கு என்னென்ன

வாங்கிக் கொண்டு வருவான் என்று அவர்கள் ஆலோசனை யில் ஈடுபட்டார்கள்.

'பட்டணத்திலே விநோதமா, புது புதுசா எத்தனையோ சாமான் விற்பாங்க. அவனும் வீட்டுக்கு உபயோகமா, அழகா, இருக்கும்படி சாமான்கள் வாங்கி வராமலா இருப்பான்?' என்று அம்மா குறிப்பிட்டாள்.

'எனக்கு நாகரிகமான ஸேரி ஏதாவது வாங்கி வருவான்' என்று ஆசைப்பட்டாள் அக்காள் பத்மா.

'எனக்கு புதுமாதிரியான நெக்லேஸ்— கோல்ட் கவரிங் ஜோரான மாடலில் எல்லாம் வந்திருக்கு— வேணும்னு முன்பே சொல்லியிருக்கேன். அண்ணன் ஞாபகமா அதை வாங்கியாருவான்' என்று தங்கை வசந்தா உறுதியாகச் சொன்னாள்.

இன்னும் இரண்டு அக்காள்களும் இந்தவிதமாக என்னென்னவோ சொல்லிக் கொண்டார்கள்.

அக்கா மகள்களும் பையன்களும் சும்மா இருந்து விடுவார் களா? அச் சிறுமிகளின், சிறுவர்களின் ஆசைகளும் கற்பனை களும் உற்சாகமான, உவகை நிறைந்த, சொற்களாக உருண்டு ஓடின.

'எனக்கு மில்க் சாக்லேட் வாங்கி வருவா மாமா.'

'படம் போட்ட டப்பாக்களிலே, நிறைய இருக்குமே மிட்டாய், அது வாங்கியாருவா!'

'மினு மினுக்குமே துணி, அதிலே தைத்த அழகான கவுன் கொண்டு வருவா'

'ஆப்பிள் பழம் நிறைய நிறைய எடுத்து வருவா...''

'எனக்கு பொம்மை!'

'ஓடுகிற ரயில் வண்டி எனக்கு!'

'பறக்கிற ஏரோப்ளேன்!'

'மூனு சக்கர சைக்கிள் வரும்'

எல்லாம் நிஜமாகவே, அப்போதே, வந்து சேர்ந்து விட்டது போலவும், தங்களுக்குக் கிடைத்து விட்டது போலவும், அவற்றைத் தொட்டு, வியந்து, அனுபவவித்து மகிழ்வது போலவும் அக்குழந்தைகள் பேசிக் களித்தனர்.

நாளுக்குநாள் அவர்களது கனவு இனிமை கூடியது; பேச்சில் சுவை ஏறியது; ஆசைகள் அற்புத நயங்களோடு மலர்ந்து உதிர்ந்து கொண்டிருந்தன.

'மாமா எப்ப வருவா?' 'எந்த ரயிலுக்கு வருவா?'—இன்னும் எத்தனை நாள் இருக்கு?—இதேதான் ஓயாத பேச்சு, ஒழியாத கவலை அவர்களுக்கு.

ராமலிங்கம் வருகிற நாளும் வந்து சேர்ந்தது. அன்று வீடே திருவிழாக் கோலம் பூண்டுவிட்டது. எல்லோருக்கும் ஆனந்தம். எல்லோரும் சுறுசுறுப்பாக வேலை செய்தார்கள். கடியாரத்தை அடிக்கடி பார்த்தார்கள். உள்ளுக்கும் வாசலுக்குமாய் அலைந்தார்கள். தெருவைத் தெருவைப் பார்த்தார்கள். சிறுமிகளும் சிறுவர்களும் தெரு வாசலிலேயே காவல் கிடந்தார்கள்.

'எங்க மாமா வரப்போறா.. இப்போ வந்திருவா...' என்று சற்றைக்கொரு தரம்—தெரிந்தவர்களிடம், தெருவில் போனவர் வந்தவரிடம் எல்லாம்—ஆனந்தப் பெருக்கோடு ஒலி பரப்பினார்கள். ஆவலே உருவாகித் துறுதுறுத்துக் காணப்பட்டார்கள்.

உரியநேரம் வந்தது. வீட்டின் முன் டாக்சியும் வந்து நின்றது.

'ஏ' மாமா வந்துட்டா! பட்டணத்து மாமா வந்தாச்சு!" என்று பிள்ளைகள் கூச்சலிட்டு வரவேற்க, ராமலிங்கம் சிரிப்பு வெடிக்கும் முகத்தோடு, இறங்கினான். டிரைவர் சிறுபெட்டி ஒன்றை எடுத்துத் திண்ணையில் வைத்தான். பணத்தைப் பெற்றுக்கொண்டு, டாக்சியைக் கிளப்பி, அங்கிருந்து அகன்றான்.

"வாய்யா' 'வா ராசா' 'வாங்க' 'வா தம்பி'— வரவேற்கும் குரல்களின் அன்பு ஒலிகள். அவனை அவன் கையை, பார்க்கும் பொருள் பொதிந்த பார்வைகள்.

எப்படி இருக்கே? செளக்கியம்தானே? பிரயாணம் சவுகரியமா இருந்துதா? கூட்டமும் நெருக்கடியும் நிறையத் தான் இருக்கும்!—ஆள் ஆளின் உபசரிப்புகள் விதம்விதமாக இருந்தன. என்ன, சின்னப்பெட்டி தானே இருக்கு இவன் கிட்டே! இதிலே என்னத்தை நிறையக் கொண்டு வந்திருக்க முடியும்?... இந்தக் கவலை அவர்கள் மனசில்.

ராமலிங்கம் உரிய பதில்களை சொன்னான்: ரொம்பக் கூட்டம்தான். டிக்கட் ரிசர்வ் செய்ய முடியலே. பத்துப் பதினஞ்சு நாளைக்கு முன்னாடியே ரிசர்வ் செய்தால்தான் வசதியாக இருக்கும். ஆபீஸ்லே வேலை ரொம்ப ஜாஸ்தி. லீவு கிடைப்பதே கஷ்டம். எப்ப கிடைக்கும் என்ன விஷயம்னே நிச்சயம் இல்லே. அதனாலே பத்து நாளைக்கு முந்தியே ரிசர்வ் செய்ய வழி இல்லே. இப்போகூட, 25-ம் தேதி போகலாம்னு முதல்லே சொல்லிட்டாங்க நானும் காயிதம் எழுதிப் போட்டேன். திடீர்னு டைரெக்டர் ஒருவர் டில்லி போயிட்டாரு நேத்து. இன்னொருத்தருக்கு சீக்கு. நீ கட்டாயம் போகத்தான் வேணுமான்னு கேட்டாரு. அவசியம் போகணும் சார்; காயிதம் எழுதிட்டேன்; ஊருக்குப் போயும் மூணு வருஷம் ஆச்சு; இப்ப போகலேன்னு சொன்னா, இன்னும் ஒரு வருஷத்துக்குப் போக முடியாமலே ஆயிடும்னேன். சரி. போயிட்டு ஒரு வாரத்துக்குள்ளே வந்திருன்னாரு. ரயில்லே ஏகப்பட்ட கூட்டம். டிக்கட்

வாங்கவே முடியாதோன்னு தோணிச்சு. ஒருத்தன் சொன்னான். இந்த ரயில்லே இப்படிக் கஷ்டப்படுவதைவிட, ஆம்னி பஸ் அழகா இருக்கு; டூரிஸ்ட் பஸ்னு ஜோர் ஜோரோ ஓடுது; வசதியா டிராவல் பண்ணலாம்; ரயிலை விட வேகமாப் போகும்; ரயிலுக்கு முந்தி ஊருக்குப் போயிடலாம்னான். அவனும் நம்ம பக்கத்துக்காரன்தான். நானும் அவன் கூடவே சேர்ந்து வரலாம்னு துணிஞ்சு கிளம்பினேன். வாறதே நிச்சயம் இல்லாமல் இருந்ததுனாலும், அவசரம் அவசரமாகக் கிளம்பியதனாலும், எதுவுமே வாங்கி வரமுடியலே.

அவன் பேச்சு எல்லோருக்கும் ஏமாற்றம் அளித்தது. பெரியவர்கள் அதை வெளியே காட்டவில்லை.

—ரயில்லே வரலியா? பஸ்லேயா அவ்வளவு தூரம் வந்தே? எப்படியும் வசதிக் குறைவாத்தான் இருக்கும்...

இப்படி ஒவ்வொருவர் ஒன்றை சொல்லி வைத்தார்கள்.

—ரயிலில் வந்திருந்தால், கொடை ரோடிலே ஆரஞ்சு, திராட்சை மலிவா வாங்கியிருக்கலாம்.........திண்டுக்கல்லிலே மலைப்பழம் சௌகரியமாக் கிடைக்கும்..........மணப்பாறை முறுக்கு பேர்போனது என்பாக...சாத்தூரிலே வெள்ளரிப் பிஞ்சு ருசியாயிருக்கும். வண்டிக்குள்ளேயே கொண்டாந்து விற்பாங்க...

இந்த விதமாகவும் பேசினார்கள்.

என்னத்தைப் பேசி என்னத்துக்கு? இவன்தான் 'வீசின கையும் வெறும் கையுமாக' வந்து நிற்கிறானே என்று ஒரு அக்காளின் மனம் அலுத்துக் கொண்டது.

'எவ்வளவு ஆசையாயிருந்தேன்! புது டிசைன் நெக்லேஸ் வரும்னு!' என்று வசந்தா தனக்குள் அழுதுகொண்டாள்.

மருமகள்களும் மருமகன்களும் குழந்தைகள் இயல்பின் படி நடந்துகொண்டார்கள்.

'மாமா, எங்களுக்கு எதுவுமே வாங்கியாரலியா?'

'எனக்கு சாக்லெட்டு?'

'பிஸ்கட் கூடவா கிடைக்கல்லே?'

'மிட்டாய் வாங்கலியா?'

'திராட்சை, மலைப்பழம்?'

'பொம்மை வாங்கியாந்தா என்ன மாமா?'

ராமலிங்கம் சிரித்தான். 'டவுனுக்குப் போவேன். உங்களுக்கெல்லாம் பிஸ்கட், மிட்டாய், லட்டு, ஜாங்கிரி எல்லாம் வாங்கி வந்து தாரேன்' என்றான்.

'என்ன மாமா நீ! பட்டணத்திலேயிருந்து ஒண்ணுமே வாங்கியாராமே வந்திருக்கே. நீ சுத்த மோசம்!' என்று வள்ளி சொன்னாள்.

'நாங்க எவ்வளவு ஆசையாயிருந்தோம்! பட்டணத்து மாமா அது வாங்கியாருவா, இது வாங்கி வருவான்னு சேக்காளிகள்கிட்டே எல்லாம் பெருமையாச் சொன்னோம். இப்ப என்னடான்னா சீத்னு போயிட்டுது. அவங்கள்ளாம் எங்களைக் கேலி பண்ணுவாங்க' என்று ராஜா அறிவித்தான்.

இந்த மாமாவை சுற்றிக் கொண்டு இருப்பதில் பிரயோசனமில்லை என்று முடிவு செய்து அவர்கள், விளையாடப் போய் விட்டார்கள்.

வீட்டுப் பெரியவர்களுக்கும் மனவருத்தம்தான்.

'இந்தக் காலத்திலே எவ்வளவு வந்தாலும் சரியாகத்தான் இருக்கு. மிச்சம் எப்படிப் பிடிக்க முடியும்? சம்பளம் கொடுக்கும் போதே, பிராவிடண்ட் பண்டு, இன்சூரன்சு, வருமான வரி, தொழில் வரி, அது இதுயின்னு ஏகப்பட்ட

பணத்தைப் புடிச்சுக்கிடுறாங்க. அப்புறம் வீட்டு வாடகை, சாப்பாட்டுச் செலவு-இதுகளுக்கே ரொம்ப ரூபா போயிருது. அடிக்கடி டிரசுக, இதர தேவைகள்னு செலவு பண்ண வேண்டியிருக்கு. தினசரி ஆபீசுக்கு போக வர பஸ், செலவு வேறே, மாசா மாசம் இங்கே பணம் , அனுப்புறேன். இதெல்லாம் போக மிச்சம் புடிச்சு நிலம் வாங்கவும், வீடு கட்டவும் ஆசைப்பட்டால் அது நடக்கக் கூடிய காரியமா?' என்றான் அவன்.

'உருப்படத் தெரியாதவன்!' என்று முடிவு கட்டியது பெரியவர்கள் உள்ளம். 'ஒவ்வொருத்தன் என்னமாப் பணம் சேத்துப் போடுறான்! வீடு வாசல் நிலம் நீச்சு காருன்னு என்ன ' தடபுடல் பண்ணுறான்! இவன் பட்டணத்திலே பெரிய வேலையிலே இருக்கான்னுதான் பேரு...பேரு பெத்த பேரு, தாக நீலு லேதுங்கிற கதை தான். தம்பிடிக்குப் பிரயோசனம் இல்லே போ!' என்று மனக்கசப்பு கொண்டார்கள்.

மனிசன் வாழ்க்கை நடத்தவே எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்குங்கிறது இவங்களுக்கெல்லாம் எங்கே தெரியப் போகுது என்று எண்ணிச் சிரித்தான் ராமலிங்கம். அவன் சிரிப்பை அதிகப்படுத்தும் விதத்தில் குழந்தைகளின் கும்மாளிக் கூச்சல் வெளியே ஒலித்தது.

வள்ளி டைரக்ட் செய்து கொண்டிருந்தாள்:

'ஏய், நான் பாடுவேன். என் கூடச் சேர்ந்து எல்லாரும் பாடணும்...என்ன சரியா?....ரைட், பாடுங்க!'

முதலில் அவள் குரல் ஓங்கி எழுந்தது.

"பூப் பூ—புளியாம் பூ
பறிச்சுப் போட்டா
தாழம் பூ!'

மற்றப் பிள்ளைகள் பிறகு 'கோரஸ் கீதம்' எழுப்பி னர்.

'சித்தாத்தா அடுப்பிலே
சிறுகிழங்கு வேகலே!'

வள்ளி நிறுத்தி, நீட்டி, ராகம் இழுத்தாள். அதைத் தொடர்ந்து மற்றவர்களும் முழங்கினர்.

'மாமா வந்த ஜோரிலே
மல்லிகைப் பூ பூக்கலே!''

வள்ளியின் தனிக் குரலும், இதரர்களின் கூட்டுக் குரலும் இதைத் திரும்பத் திரும்ப ஒலி பரப்பின.

'ஏஹேஹே, மாமா வந்த ஜோரிலே, மல்லிகைப் பூ பூக்கலே! திருநாளும் வெறும் நாளாப் போச்சு டோடோ டோய்!' என்று வள்ளி கத்திக் கூச்சலிட்டு, கை கொட்டிச் சிரித்தாள். மற்றப் பிள்ளைகளும் 'ஓகோகோ' என்று ஓல மிட்டார்கள். □

# அரைகுறை

அவன் கற்பனைகளினால் அதிகம் பாதிக்கப்பட்டான். பிறருடைய கற்பனைகளும் அவனுடைய சுயகற்பனைகளும் அவனது சித்த வெளியில் விதவிதமான சலனங்களை உண்டாக்கின.

அவை பற்றியே அவன் யோசித்தான், பேசினான், கடிதங்களில் எழுதினான். அதனால் அலைமோதிய உள்ளம் ரகம்ரகமான, விசித்திரமான கனவுகளை சிருஷ்டிப்பதும் சகஜமாயிற்று. விழிப்பு நிலையிலும், தூக்க நிலையிலுமே தான்.

சூரியனின் வெப்பம் குறைந்து போகும்; அதனால் உலகம் பூராவும் குளிர்ந்து, பனிக் கட்டிகள் உறைந்து காணப் படும். துருவப் பிரதேசங்களில் வாழ்கிற மிருகங்கள், பறவைகள் போன்ற ஜீவராசிகளே எங்கும் நடமாட இயலும். இவ்வாறு வான இயல் ஆய்வாளர் அவ்வப்போது எழுதி வருவதை அவன் படித்தபோது அவனுடைய மனம் வெகுவாக பாதிக்கப்பட்டது.

அதைவிட அதிகமான தாக்கம், ஆங்கில நாவலாசிரியன் ஒருவனின் எழுத்தை படித்தபோது அவனுள் நிகழ்ந்தது. ஒரு கதாபாத்திரம் உற்சாகமாக வர்ணிக்கிறான். 'உலகம் குளிர் மூடிய பரப்பு ஆகிவிடுகிறது. எங்கும் பனிக்கட்டி பரப்பே தான்; வெப்ப நாடுகளில் வசித்த மனிதர்கள் இறந்து விடு கிறார்கள். துருவப் பகுதிகளில் சஞ்சரிக்கிற வெள்ளைக் கரடி, வெள்ளை நரி, விசித்திரமாய் தோன்றுகிற பெங்குவின் பறவைகள், தூந்தரப் பிரதேசங்களில் உயிர் வாழ்ந்து பழகி விட்ட மனிதர்கள் தான் நடமாடித் திரிகிறார்கள்.

அவன் அதுபற்றியே எண்ணி கொண்டிருந்தான். தானும் ஒரு விசித்திரப் பறவையாகி விநோதமாக நடந்து திரிவதாக அவன் கனவு கண்டான்.

அப்புறம் நினைக்க நினைக்க இந்தநிலை பனியும் குளிரும் மிகுதியாக நீடிக்கிற உலகப் பகுதியில் வேண்டுமானால் நிகழலாம். வெயில் சுட்டெரிக்கிற நமது நாட்டுக்கு இது ஒத்து வராது என்று அவன் மனம் பேசியது. அதுக்கு வெகுவாகப் பிடித்துப் போயிற்று, சிந்தனையாளர் ஒருவரின் எச்சரிக்கைக் குரல், ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்த ஒரு கட்டுரை.

—கி. பி. 2001-க்குள் இந்தியா பாலை நிலமாக மாறி விடும். இது உறுதி. இப்பவே காலாகாலத்தில் மழை பெய்வதில்லை. மழை பெய்தாலும் அது போதுமானதாக இல்லை. எங்கும் வரட்சியும் தண்ணீர் கஷ்டமும் வருடத்துக்கு வருடம் அதிகரித்து வருகிறது. இதுக்கெல்லாம் காரணம் நாடு நெடுகிலும் சகட்டு மேனிக்கு மரங்கள் வெட்டி வீழ்த்தப்படுவது தான். ஒவ்வொரு மலைத் தொடர் மீதும், பன்னெடுங் காலமாக ஓங்கி வளர்ந்து நின்ற பெரும் மரங்கள் சுயநலமிகளால் பண லாப நோக்குடையவர்களால் வெட்டிச் சாய்க்கப் பட்டுள்ளன.

தொடர்ந்து இந்த நாச வேலை நடைபெற்றுக் கொண்டுள்ளது. இதனால் மழை பெய்வது குறைகிறது மழை பெய்கிற காலங்களில் மலைகளில் மண் அரிப்பு ஏற்பட்டு நதிகள் மேடிட்டு வருகின்றன. பிரம்மபுத்திரா படுகையில் ஆண்டுதோறும் 14 அடிக்கு மண்மேடு உயர்கிறது. இதன் மூலம் பாதிப்புகள் பல விளைகின்றன. கங்கைச் சமவெளி எதிர்காலத்தில் சதுப்பு நிலப்பிரதேசம் ஆக மாறும். முக்கிய நதிகள் அந்நிலைபெறும். சிறு நதிகள் வறண்டுபோகும். இந்த நாடு முழுவதும் பாலை நிலமாக மாறிவிடும்.

புள்ளி விவரங்களோடு உணர்ச்சிகரமாக விவரித்திருந்த கட்டுரையாளரின் சிந்தனைகள் அவனுடைய மனக்குகையில் பலவித சஞ்சல நெளிவுகளைப் புகுத்தின.

கங்கைப் பெருவெளி சதுப்பு நிலமாக மாறுமோ மாறாதோ, தமிழ்நாடு வறண்ட பாலையாக மாறுவதற்கு வாய்ப்புகள் அதிகம் என அவன் கருதினான். இப்பவே நீரற்ற நதிகள்தான் இந்நிலப்பரப்பில் அதிகம் காணப்படுகின்றன. மழை இல்லை. எங்கும் வறட்சி. நாடு நெடுகிலும் மனிதர்கள் தண்ணீருக்காகப் படுகிற பாடு மிக்க மனக் கஷ்டம் தருவதாக இருக்கிறது.

இதுபற்றிய நினைப்புகளே அவனுள் புழுங்கின. அதன் விளைவாகவே போலும் அவன் விசித்திரமான கனவு கண்டான். அது மாதிரிக் கனவு அவனுக்குப் புதியது அல்ல. வெவ்வேறு சமயங்களில்—இதுவரை இரண்டு மூன்று தடவைகள் இதே கனவு வந்திருக்கிறது.

கடல் வற்றி வறண்டு போகிறது. வெறும் தரை காட்சிப் படுகிறது. கண்ட கண்டபொருள்களும், கடல் வாழ் ஜீவன்களின் கூடுகளும், எலும்புகளும் பிறவும் எங்கும் தென்படுகின்றன. மக்கள் வேடிக்கை பார்க்கிறார்கள். அவனும் உள்ளே இறங்கி நடக்கிறான். திடீரென்று அலைகள் மீண்டும் வருகின்றன, வேகமாக வருகின்றன. மக்கள் அலறி அடித்து, உயிர்தப்ப கரை நோக்கி ஓடுகிறார்கள். அவனும் ஓட முயல்கிறான். அவன் கால்கள் இயக்க சக்தியை இழந்து விட்டன. பயங்கரமான பேரலை அவனை நோக்கி விம்மி எழுந்து சாடிவருகிறது. அச்சத்தால் நடுங்கி அலறியபடி அவன் விழிக்கிறான்.

நிசமாகவே நடப்பது போன்ற உணர்வுடன் பதறி அலறி, விகாரக்கூச்சலிட்டு விழித்தெழுவது அவன் வழக்கம்.

இப்பவும் அதேமாதிரிக் கனவு. ஆனால், சிலசில மாறுதல்கள் இருந்தன.

இது மாநகரின் கடலோரம் இல்லை. மகாபலிபுரம் சூழல் தோற்றம். கரைமீது கற்கோயில்கள், சிற்பங்கள் அலை வந்து

மோதுகிற கோயில். அதேபோல், நீர் வற்றிப்போன கடலுக்குள்ளும் கல் கட்டிடங்கள், இடிபாடுகள், விழுந்து கிடந்த கல்தூண்கள் தென்பட்டன. முந்திய மாலை அவன் வந்த போது கடல் கடலாக இருந்தது. காலையில் அலையாடும் நீர்ப்பரப்பைக் காணவில்லை. சமீபத்தில் தான் நீர் உள்வாங்கியிருக்க வேண்டும். தரை சதசதவென்று அங்குமிங்கும் நீர்ச் சுவடுகளோடு இருந்தது. அவன் உள்ளே இறங்கிப் போனான். தாறுமாறாகக் கிடந்த தூண்களையும் கல் கட்டுமானங்களையும் தாண்டித் தாண்டி சிரமத்தோடு முன்னேற வேண்டியிருந்தது. ஒரு சிதைந்த கட்டிடத்தைக் கடந்து திரும்பவும் சற்று தொலைவில் ஒரு தூண் கவர்ச்சியாக நின்றது. சிற்பங்கள் செதுக்கப்பட்ட பாதித்தூண். அதுவரை போய், சிற்பத்தூணைத் தொடவேண்டும் என்று அவன் நினைத்தான். ஆனாலும், உள்ளத்தில் ஒரு உதைப்பு. அலைகள் பொங்கி எழுந்து மறுபடியும் வந்து விட்டால்? ஓடிவர தூண்களையும் சிதைவுகளையும் தாண்டித் தடுக்கி தடுமாறி கரைக்கு வருவதற்குள் ஆபத்து நேரிடலாமே?

இந்த பய உணர்ச்சி விழிப்பு தந்தது.

இக்கனவுபற்றியே எண்ணிக் குழம்பிய அவன் தன் நண்பன் ஒருவனிடம் அதை விவரித்தான். தனது பயத்தையும் வெளியிட்டான்.

கவி உள்ளம் கொண்ட நண்பன் தன் மனப்பதிவுகளை அழகாகச் சித்தரித்தான் இப்படி—

'கனவுகளும் கற்பனைகளும் மனித மனசின் அற்புத வெளிச்சங்களைக் காட்டுவது. பாதியில் நிற்கிற சிற்பத் தூணை அடைய முயன்று, அலைகளுக்கு அஞ்சித் திகைத்துப் பின்வாங்கி விழிக்கிற மனிதன் மாதிரி தான் அநேக கலைஞர்கள் இருக்கிறார்கள். வாழ்க்கையின் பாதுகாப்பான கரைக்கு, அழைத்தலுக்குச் செவி சாய்த்துப் பின் வாங்காமல் மேலே மேலே முன்னேறி, சிற்பத் தூணை அடைந்து

தானும் தன் பங்குச் செதுக்கலை மேற்கொள்கையில், அலைகளின் பிரக்ஞைக்கு அப்பால் போய், அப்படிப் போன தருணம் பார்த்துச் சீறுகிற அலைக்குத் தன்னை விழுங்கக் கொடுக்கிற கலைஞர்கள் தான், அடுத்த தலைமுறைக்கு நிறைய சிற்பங்களை சேமித்துவிட்டு போகிறார்கள்.

இந்தச் சிந்தனை அவன் உள்ளத்தில் ஏதேதோ மின் பொறிகளை தட்டுவது போல் அவனுக்குப் பட்டது. இதைப் பற்றியே எண்ணலானான் அவன்.

கற்பனைகள், கனவுகள், எண்ணங்களிலேயே சஞ்சரிப்பவன் அவன். அவற்றால் வெகுவாக பாதிக்கப்படுகிறவனும்கூட. 

# வெளிச்சம்

வாழ்க்கை இருண்டு விட்டதாகத் தோன்றியது சிவசிதம்பரத்துக்கு.

எங்கும் இருட்டு. எதிலும் இருட்டு. எப்போதும் இருட்டு.

வீட்டிலும் வெளியிலும் ஒளி இல்லை என்றே அவருக்குத் தோன்றியது. அவர் உள்ளத்தில் இருட்டு நிலவியதுதான் காரணம்.

சிவசிதம்பரம் இந்த வாழ்க்கை அர்த்தமற்றது என்று நினைத்தார். மனிதர்கள் எல்லோரும் இயந்திர ரீதியில், செய்ததையே செய்து கொண்டு, எண்ணியதையே எண்ணியும் பேசியதையே பேசியும், பொருளற்ற தன்மையில் பொழுது களை ஓட்டிக்கொண்டிருப்பதாக அவருக்குப் பட்டது.

நேற்றுப் போல் இன்று; இன்று போல் நாளை, என்றும் ஓரே மாதிரித்தான். திடீரென்று ஒரு நாள் மரணம் வந்து அழித்து விடுகிறது. அனைத்தையும் அர்த்தமற்றதாக்கி விடுகிறது.

பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் ஒவ்வொருவரும் சுயநலத்தோடும், சுயப் பெருமையோடும், சுயவிளம்பரத் தோடும் என்னென்ன நாடகமெல்லாம் ஆடித் தீர்க்கிறார்கள்! முடிவில், சாவு வந்து கொத்திப் போகிறது. இதெல்லாம் எதுக்காக?

வாழ்க்கையே ஒரு போராட்டம் என்றால், அந்தப் போராட்டம்தான் எதுக்காக? காலத்தோடு போட்டி போட்டுக் கொண்டு பயனுள்ளனவும் பயன் இல்லாதனவுமான

காரியங்கள் பலப்பலவற்றையும் செய்து கொண்டு, பலவித மான உணர்ச்சிகளினாலும் எற்றுண்டு அலைக்கழிக்கப்பட்டு குழம்பித் தவித்து, தன்னைச் சேர்ந்தவர்களையும் பிறரையும் குழப்பியும் திணறவைத்தும் கோபித்தும் சண்டை போட்டும், வாழ்க்கையை அமைதியும் ஆனந்தமும் இல்லாததாக மாற்றிக் கொண்டு, இறுதியில் செத்துப்போக வேண்டியிருக்கிறது! எனவே, வாழ்க்கைப் போராட்டத்தில் மனிதனுக்குத்தான் தோல்வி...

இப்படி சிவசிதம்பரம் அடிக்கடி எண்ணிக் கொண் டிருந்ததனால், அவர் உள்ளத்தில் இருட்டு கனிந்து கனத்தது.

அவர் மனிதர் யாரையும் நம்பத் தயாராகயில்லை. எவருடனும் பழக முன்வரவில்லை. தனிமை அவருக்குப் பிடித்திருந்தது. அந்தத் தனிமை அவரது விரக்தி உணர்வு கொடி வீசிப் படர்ந்து செழிக்கத் துணைபுரிந்தது.

சிவசிதம்பரத்துக்கு நண்பர்கள் இல்லை. அவர் யாருடனும் சுமுகமாகப் பேசிப்பழகுவதில்லை. அவருடைய இயல்புகளை உணர்ந்த அக்கம்பக்கத்தினரும், உற்றார் உறவினரும் அவரை விட்டு விலகியே போனார்கள்.

அவர் ஒரு உத்தியோகம் பார்த்தார். அதிலேயே ஆழ்ந்திருந்தார். கண்டிப்பாகவும் கறாராகவும் நடந்து வந்தார். எப்போதும் எதையாவது படித்துக் கொண்டிருந் தார். படிக்காத நேரங்களில், ஏதோ தீவிர யோசனையில் ஆழ்ந்திருப்பது போல் உம்மென்று உட்கார்ந்திருப்பார்.

அவருடைய நாட்களில் சந்தோஷங்களுக்கே இடம் இல்லாது போயிற்று. என்றோ வரக்கூடிய மரணத்தை எதிர்பார்த்து அவர் காத்திருப்பது போலிருந்தது. சில சமயங் களில் அவருடைய மனமே அதை சொல்லிக் கொண்டது: சாவு சீக்கிரமே வந்து விட்டால் நல்லது. அர்த்தமற்ற வாழ்க்கையில் வீணாக எது எதையோ செய்து பொழுது

போக்குவதில் என்ன பிரயோசனம்? செத்துப் போவதே தேவலை.

இந்த நினைப்போடுதான் சிவசிதம்பரம் அந்த வேளையில் ரஸ்தாவில் நடந்து கொண்டிருந்தார். மாலை நேரம். பொங்கிப் பிரவாகித்துச் சுழித்து அலை எற்றிப் புரண்டோடும் நதி மாதிரி நாகரிக ரஸ்தா இயங்கிக் கொண்டிருந்தது.

விதம் விதமான வேக வாகனங்கள். அவசரம் அவசரமாக விரையும் புயலாகப் போக்குவரத்து சாதனங்கள். பரபரப்போடு செல்லும் பாதசாரிகள். அங்கங்கே தடைகளாய் நின்று விடும் சில வண்டிகள், மனிதர்கள்.

அவருக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது. வெறுப்பு நுரையிட்டது. சனியன்கள்! எதுக்கு இத்தனை வேகம்? என்ன எழவுக்கு இத்தனை அவசரம்? சாகப் போகிற பீடைகள்.

தன்னுள் அலைபுரண்ட எண்ணத்தில் லயித்திருந்த சிவசிதம்பரம் தன்னை அறியாமலே ரஸ்தாவின் ஓரத்தை விட்டு நகர்ந்து, மத்தி என்று சொல்லப்பட வேண்டிய அளவுக்கு ரோடில் வந்து விட்டார்.

அப்போது அவர் எதிர்பாராத அதிர்ச்சி அவருக்கு நேரிட்டது.

வேகமாக எதிரே வந்த மோட்டார் பைக் அவரை மோதுவது போல் நெருங்கியது. பின்னேயிருந்து ஒரு ஆட்டோ ரிக்ஷா வெகு அவசரமாக வந்தது.

இரண்டில் எதிலாவது ஒன்றில்—அல்லது இரண்டிலுமே—அடிபட்டுக் கீழே விழப் போகிறோம் என்று அவருக்குத் தோன்றியது. அநியாயமாக நடுரோட்டில் சாகப் போகிறோமே என்றொரு உணர்ச்சி. அவர் உடல் நடுங்கியது.

இருட்டில் வாழ்கிற பூச்சி திடீர்வெளிச்சம் தாக்கியதும் செயலற்றுத் திணறித் தவிப்பது போல அவரும் திண்டாடினார். இதோ மோட்டார் பைக்... இதோ இதோ ஆட்டோ ரிக்ஷா... மோதப் போகிறது! சாகப் போகிறோம்...

அட பாவிகளா என்று அலறி விட்டதாக நினைத்தார். வாயை திறந்து திறந்து மூடினாரே தவிர அவரால் எந்த ஒலியும் எழுப்ப இயலவில்லை.

கிரீச்சிட்டு நின்றது ஆட்டோ. ஸடன் பிரேக் போட்டுத் திறமையாக வண்டியை நிறுத்திவிட்டார் அதன் டிரைவர்.

மோட்டார் பைக் ஆசாமி சிறிது வெட்டி முறித்துத் தன் வண்டியை விலக்கி வழி மேல் சென்றார். 'மடையன்! ரோட்டிலே ஓரமா நடக்கணும்கிற அறிவு இல்லே?' என்று திட்டிக் கொண்டே பறந்து போனார். அவர் அவசரம் அவருக்கு!

ஆட்டோ ரிக்ஷா டிரைவரும் 'ஏன்யா, வீட்டிலே சொல்லிட்டு வந்துட்டியா? பார்த்துப் போ!' என்று உபதேசித்து விட்டு, வண்டியை நகர்த்தி ஓட்டிச் சென்றார்.

சிவசிதம்பரத்தின் உடல் படபடப்பு குறையவில்லை. நெஞ்சு திக் திக்கென்று அடித்தது. ஒருவித பயம் உள்ளில் நிறைந்திருந்தது. சாவு நெருங்கி வந்ததில் சிறிதளவு சந்தோஷம் கூட அங்கே தலை காட்டவில்லை. நல்லவேளை, பிழைத்தோம் என்ற திருப்திதான் இருந்தது.

அவர் நின்று, கவனித்து, நிதானமாக ரோடு ஓரத்தில் நடக்கலானார். சாவு பற்றி சர்வசாதாரணமாக எண்ணினாலும், சாவை வரவேற்று எதிரேற்க நாம் தயாராக இல்லை. பயம் தான் முந்துகிறது. உயிராசை வலியது சாவை வரவேற்று சகஜமாக எதிர்கொள்வதற்கும் ஒரு தைரியம் வேண்டும்.

இந்த விதமாக எண்ணத் தொடங்கியது சிவசிதம்பர மனம்.

அதுமுதல் அவருள் சில மாற்றங்கள் அரும்பலாயின.

'ஐயா, பிச்சை!' என்று கை நீட்டி அருகே வந்து கெஞ்சியவர்களுக்கு எதுவுமே கொடுக்க மாட்டார் அவர். பிச்சை போட்டு, இவர்களுடைய சோம்பேறித்தனத்தை ஆதரிப்பது தப்பு என்றே அவர் மனம் பேசும்.

இப்போது அவர் பிச்சை கேட்டவர்களுக்கெல்லாம் காசுகள் தந்தார்.

'ஸார், நான் இந்த ரோடைக் கடக்க வேண்டும், பயமாயிருக்கு. என்னை இட்டுக்கொண்டு அந்தப் பக்கம் விட்டு விடுங்களேன்' என்று யாராவது தள்ளாதவர்கள், கிழவிகள், அவரிடம் உதவி கோரியது உண்டு அப்போதெல்லாம், வேறே வேலையில்லையாக்கும்? என்று முனகியபடி நடப்பதே அவர் சுபாவம், அல்லது, அந்தப் பேச்சு வேறு யாரை நோக்கியோ கூறப்பட்டதாக, தனது காதில் அது விழாதது போல், தன் பாட்டுக்கு முன்னேறுவார்.

இப்போது, 'ஏஎய், பார்த்துப் போ...வண்டி வருது... நில்லு நில்லு!' என்று எச்சரித்து, அவராகவே வலியப் போய் மற்றவர்களுக்கு உதவி செய்யலானார். முதியவர் களையும் சிறு பிள்ளைகளையும் கையைப் பிடித்து மெதுவாக நடத்தி, அவர்கள் ரோடை பத்திரமாய் கடப்பதற்கு உதவினார்.

அவர்கள் முகம் மலர்ந்து நன்றி கூறியபோது-அல்லது, நன்றி உணர்வை சொல்லால் புலப்படுத்தத் தெரியாதவர் களாய் முகமலர்ச்சியால் காட்டியபோது, அவருக்கும் சந்தோஷம் ஏற்பட்டது.

கொடுப்பதில் ஒரு சந்தோஷம் இருக்கிறது; உதவி தேவைப்படுகிறவர்களுக்கு உதவி செய்வதில் ஒரு இன்பம் கிட்டுகிறது என்று கண்டு கொண்டது சிவசிதம்பர உள்ளம்.

ஒரு நாள், எதிர்வீட்டுக் குழந்தை அவர் வீட்டு வாசல் படியில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தது. வெளியே போய் விட்டு வந்த சிவசிதம்பரம் நின்று, 'என்ன விஷயம்? ஏன் அழுறே?' என்று கேட்டார்.

முன்பென்றால் எரிந்து விழுந்திருப்பார். 'போ மூதேவி. இங்கே ஏன் உட்கார்ந்திருக்கே?' என்று கத்தியிருப்பார்.

ஏழு வயதுச் சிறு பெண். சுமாரான அழகு. கண்களில் ஒரு குறுகுறுப்பு. அது அழுது கொண்டே சொன்னது. 'அம்மா அடிச்சா. நோட்டு வாங்கணும். நோட்டு இல்லாமப் போனா, டீச்சர் அடிப்பாங்க....' அது விம்மியது.

சிறுபிள்ளையாய் இருப்பதும் கவலையில்லாத, சந்தோஷமே மிகுந்த விஷயமில்லை; அந்தப் பருவத்துக்கும் எத்தனையோ கவலைகள், பிரச்சனைகள் இருக்கத்தான் செய்கின்றன! சிவசிதம்பரம் இப்படி எண்ணிக் கொண்டார்.

மெது மெதுவாகப் பேச்சுக் கொடுத்து, சிறுமியின் தேவையைப் புரிந்து கொண்டு, அதை அழைத்துப் போய், கடையில் ஒரு நோட்டு வாங்கிக் கொடுத்தார். மிட்டாயும் வாங்கித் தந்தார்.

சிறுமியின் அழுகை போன இடம் தெரியாமல் மறைந்தது. அதன் முகம் சந்தோஷத்தின் அழகுப் பூ ஆயிற்று. அதன் கண்களில் விசேஷ ஒளி சுடரிட்டது.

'இங்கிலீஷ் மீடியம் ஸ்கூல்' மாணவியாக இருந்தால் 'தேங்க்ஸ்' 'தேங்க் யூ' என்று திரும்பத் திரும்பச் சொல்லி

யிருக்கும். இது சாதாரணக் குழந்தை. 'நன்றி' என்று வாய்விட்டுச் சொல்லும் நாகரிகம் கற்காத பிள்ளை.

சந்தோஷம் பூத்துக் குலுங்கும் முகத்தை அவர் பக்கம் திருப்பித் திருப்பிக் காட்டியபடி-திரும்பித் திரும்பி நோக்கிச் சிரித்தவாறே—அது பள்ளிக்குச் சென்றது.

அந்தக் காட்சி சிவசிதம்பரத்தின் உள்ளத்தில் தனி ஒளி பாய்ச்சியது. அவர் முகத்திலும் சிரிப்பு ரேகையிட்டது.

அன்று மாலை, அந்தப் பிள்ளையை அழைத்துக் கொண்டு அதன் தாய் வந்தாள். மரியாதை காட்டி வணங்கினாள். தன் கஷ்டங்களைப் புலம்பினாள். பணம் வந்ததும், நோட்டுக்கு அவர் கொடுத்த காசை திருப்பித் தந்து விடுவதாகச் சொன்னாள்.

'அதெல்லாம் வேண்டாம். அது நல்லாப் படிக்கட்டும். ஒழுங்கா ஸ்கூலுக்குப் போகட்டும். அதை அடிக்காதே' என்றார் அவர்.

'சரி சாமி' என்று கும்பிட்டாள் அவள்.

'அதுக்கு எப்பவாவது நோட்டு, பென்சில் ஏதாவது தேவைப்பட்டால், என்னிடம் கேட்கச் சொல்லு. நான் வாங்கித் தருவேன்' என்றும் கூறினார்.

அவள் தலையாட்டி, கும்பிடு போட்டு, மகளைக் கூட்டிக் கொண்டு போனாள்.

சிவசிதம்பரம் இப்படிப் பலருக்கும் சிறு சிறு உதவிகள் செய்வதில் உற்சாகம் கொண்டார். அதனால் அவர் மனசில் சந்தோஷம் பூத்தது.

அவரிடம் உதவி பெற்றவர்கள், அவருடைய அன்புக்கு இலக்கான அக்கம் பக்கத்தார், அவரை நேசிக்கலானார்கள்.

தங்கள் வீட்டில் விசேஷம் வந்தால்—விசேஷமாக வடை, பாயசம் என்று ஏதேனும் செய்தால் அவருக்கும் அன்போடு கொடுத்து அனுப்பினார்கள்.

அன்பு அன்பை வளர்க்கிறது. அன்பு மனிதநேயத்தை வளர்க்கிறது, அன்பு உள்ளத்தில் மகிழ்ச்சி பூத்துக் குலுங்கத் துணை புரிகிறது. அன்பு வாழ்க்கைக்குத் தனி அர்த்தம் தருகிறது.

சிவசிதம்பரம் இந்த உண்மையைப் புரிந்து கொண்டார். அவர் உள்ளத்தில் கவிந்து கிடந்த இருட்டு மெது மெதுவாக விலகியது.

அன்புப் பேரொளி பிரகாசிக்கிற இடங்களில் இருட்டுக்கு இடம்தான் ஏது? □

# விளையாட்டுப்பிள்ளை

'ஏது, இன்னிக்கு சீக்கிரமே சாப்பிட வந்தாச்சு? அதுக்குள்ளே பசிக்க ஆரம்பிச்சுட்டுதோ?'

கிண்டலாகக் கேட்டாள் பாவாடை தாவணிக்குமரி. அவளுக்கு பதின்மூன்று— பதினாலு வயசு இருக்கும். மலரும் பருவத்தின் விளிம்பில் நின்றவள், வயசுக்கேற்ற தனி மெருகும் வனப்பும் பெற்றிருந்தாள்.

அந்தச் சிறிய உணவு விடுதியினுள் நண்பனுடன் பிரவேசித்த சந்திரன் அவளைப் பார்த்துச் சிரித்தான். 'ஆமா. பசிதான்' என்றான்.

பிறகு நண்பனிடம் சொன்னான்: 'இவங்கதான் இந்த உணவு விடுதியின் நிர்வாகி, இயக்குநர், மேலாளர் எல்லாமே. இவங்க இந்த இடத்தின் ராணி என்று சுருக்கமாகச் சொல்லிப் போடலாம். இவங்க இஷ்டப்படி தான் இங்கே எல்லாமே நடக்கும்... இல்லையா ராணியம்மா?'

அவள் முகம் மலர்ச்சி காட்டியது. பேசாமல், இரண்டு இலைகளை எடுத்து வந்தாள். மேஜை மீது பரப்பினாள். தம்ளர்களில் தண்ணீர் கொண்டுவந்து வைத்தாள்.

'இந்த அம்மா, நேற்று நான் ரொம்ப நேரம் கழிச்சு வந்தேன்னு கோபிச்சுக்கிட்டாங்க. ஏன் லேட்? இத்தனை நேரம் கழிச்சு வந்தா என்ன அர்த்தம்? உங்களுக்காக எல்லாத்தையும் தனியே எடுத்து வச்சுப் பாதுகாக்க முடியுமான்னு கார்வார் பண்ணினாங்க. இன்னிக்கு ஏன் சீக்கிரம் வந்தேன்னு விசாரணை பண்றாங்க. நேரம் கழிச்சு

வந்தாலும் தப்பு; சீக்கிரம் வந்தாலும் தப்பு இவங்க தர்பாரிலே!'

சந்திரன் பேச்சுக்கு நண்பன் ரத்னம் என்ன சொல்வது எனத் தெரியாமல் விழித்தான். அந்தப் பெண்ணைப் பார்த்தான்.

துடிப்பாகத் தோன்றிய அவள் அவசரப்படுத்தினாள். 'உம் உம். இலையைப் பரப்பி தண்ணி தெளியுங்க. இட்லி வைக்கட்டும். எத்தனை நேரம் தான் இட்லியை தட்டிலே வச்சுகிட்டு காத்து நிற்கிறது?' என்றாள்.

சந்திரன் பயந்தவன் போல் பரபரப்பாகச் செயலாற்றினான். அவள் இட்லிகளை வைத்தாள். சட்னி போட்டாள். சாம்பாரும் ஊற்றினாள்.

நேற்று ராத்திரிச் சாப்பாட்டுக்கு வரவே இல்லையே ஏன்? என்று கேட்டாள்.

'நண்பர்களோடு பேசிக்கிட்டிருந்தேன். பொழுது போனதே தெரியலே. ரொம்ப நேரம் ஆயிட்டுது. அதுக்கு மேலே இங்கே வருவானேன்னு வரலே!'

'அப்ப ராத்திரி சாப்பிடவே இல்லையா?'

'சாப்பிடாம இருக்க முடியுமா? பன், பழம், டீன்னு உள்ளே தள்ளி வயிற்றை ரொப்பினேன்' என்று சந்திரன் கூறினான்.

'ஊகுங். இது சரியில்லே' என்று அவள் தலையாட்டினாள். அப்போது அவள் முகத் தோற்றம் அதிகக் கவர்ச்சிகரமாக இருந்தது.

'எது சரியில்லே?' என்று வம்புக்கிழுத்தான் சந்திரன்.

'உங்ககிட்டே ஒரு ஒழுங்கு, கட்டுப்பாடு இல்லே. சாப்பாட்டு விஷயத்திலேயே இப்படின்னு சொன்னா, மற்றக்

காரியங்களிலே எப்படி இருப்பீங்களோ? ஒரு தடவை சீக்கிரம் சாப்பிடறது. இன்னொரு தடவை சாப்பிடாமலே இருந்திடறது. இது தப்பு. குறிப்பிட்ட ஒரு டைம் வைத்துக் கொண்டு டாண்ணு அந்த நேரத்திலே சாப்பாட்டை முடிச்சிடணும். சாப்பாட்டு நேரத்திலே சாப்பாடு; மத்ததெல்லாம் அப்புறம்தான்னு வழக்கப்படுத்திகிடணும். அதுதான் உடம்புக்கு நல்லது' என்று உரிய பாவங்களுடன் பேசித் தீர்த்தாள் அவள்.

'தேங்க்ஸ், இனிமேல் அப்படியே செய்ய முயற்சிக்கிறேன்' என்றான் சநதிரன்.

'அதுசரி, இன்னிக்கு ஏன் இவ்வளவு சீக்கிரமாவே சாப்பிடுறீங்க? எங்காவது கேம்ப்பா?' என்று அறியும் அவாவுடன் அவள் விசாரித்தாள்.

'ஊக்கூம். இவரு என் சிநேகிதர் ஊரிலேயிருந்து வந்திருக்காரு. காலையிலேயே குளிச்சாச்சு. உடனேயே காலைச்சாப்பாட்டையும் முடிச்சிரலாமேன்னு வந்தோம். வந்தது தப்பா?'

அவள் சிரித்தாள். உள்ளே போனாள். தோசை எடுத்து வந்து வைத்தாள். 'வடை வேணுமா?' என்று கேட்டாள். சாப்பிட வந்த இன்னொருவரை கவனிக்கச் சென்றாள்.

அது பெரிய ஓட்டல் ஒன்றுமில்லை. வீட்டிலேயே சிறு அளவில் நடைபெற்று வந்த உணவு விடுதி. குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள— வாடிக்கையான — சில நபர்களுக்கு மட்டுமே அங்கே பதிவாக மூன்று வேளைகளும் உணவு வகைகள் படைக்கப்பட்டு வந்தன. ஒவ்வொரு வேளையும், அதிகப்படியாக ஐந்து அல்லது ஆறு பேருக்கு உணவு தயாராக இருப்பதும் உண்டு. வழக்கமாகச் சாப்பிடுகிற யாராவது இப்போது சந்திரன் செய்ததுபோல தனக்கு தெரிந்தவர்; வேண்டியவர் என ஒன்றிருவரை உடன்

அழைத்து வரக்கூடும். விடுதிப் பெருமையை அறிந்த எவராவது ஒருவர் தேடி வந்து விடக்கூடும். அப்போதெல் லாம், 'சாப்பாடு இல்லை; திரும்பிப் போங்க' என்று சொல்ல முடியுமா என்ன? சாப்பாட்டுப் பொருள்கள் ரெடியாக இருந்தால் எப்படியும் விலையாகிப் போகும்.

அப்படியே விலைபோகாது எஞ்சிக்கிடந்தாலும் வீணாகவா போய்விடும்? அதில்லை. குடும்பத்தினர் சாப்பிட உதவும்.

குடும்பத் தலைவர் சிவநேசம்தான் அந்த உணவு விடுதியின் அதிபர். அவர் மனைவி அன்னம்மாள் உணவு வகைகளை அதி ருசியாகத் தயாரித்தாள். பெரியமகள் மீனாட்சி ரொம்ப ஒத்தாசையாக இருந்தாள். அவள் வாழாவெட்டி. தோசைக்கு மாவு அரைப்பது, பாத்திரங்கள் கழுவுவது, வீடு பெருக்குவது, எச்சில் இலைகள் எடுப்பது போன்ற சகல காரியங்களையும் அவளே கவனித்துக் கொண்டாள்.

வெளியே கடைகளுக்குப் போய்வருவது, கணக்கு வழக்கு களை கவனிப்பது, சாப்பிட வருகிறவர்களை உபசரித்து உணவு பரிமாறுவது முதலிய வேலைகள் அவர் பொறுப்பு.

ஆட்கள் அதிகமாக வராத நேரங்களில், இளைய மகள் புஷ்பா கவனித்துக் கொள்ளக் கூடிய சமயங்களில், வெளி அலுவல்களை முடிப்பதற்காக சிவநேசம் போய்விடுவார். அது போன்ற வேளைகளில் புஷ்பாவின் ஆட்சிதான்.

எட்டாவது வரை படித்தது போதும் என்று பெற்றோர் அவள் படிப்பை ஏறக் கட்டிவிட்டார்கள். 'கடையை கவனிக்கவும் ஆள் வேண்டும் அல்லவா? உதவிக்கு ஒரு ஆள் நியமித்தால் அதிகப்படியான செலவு தானே ஆகும்? புஷ்பா வீட்டோடு இருந்தால் உதவிக்கும் உதவி, செலவும் மிச்சம்' என்று அம்மா வழிகாட்டியபோது, அப்பா அதை அங்கீகரித்தார். மகளின் முரண்டு செல்லுபடியாகவில்லை.

போகப் போக அவளுக்கும் இந்த வாழ்க்கை பிடித்து விட்டது. இதுவும் சுவாரஸ்யமான ஒரு விளையாட்டு என்றே பட்டது அவளுக்கு.

பல ரகமானவர்கள் சாப்பிட வந்தார்கள். சிலருடைய தோற்றம் அவளுக்கு இனிதாக இருந்தது. சிலரது பார்வை இளம் வெயில்போல் இதம் தந்தது. சிலருடைய சிரிப்பு மெல்லிய காற்று மாதிரி கிளுகிளுக்கச் செய்தது. சிரித்துப் பேசி, சிரிக்க வைத்து ரசித்த சிலர் போக்கு அவள் உள்ளத்தில் புல்லரிப்பு உண்டாக்கியது.

அவர்களில் சந்திரனும் ஒருவன். அவன் சிரித்துச் சிரித்துப் பேசினான். அவன் பேச்சு அவள் உள்ளத்தில் கிண்கிணிநாதங்களை இசைத்தது; முகத்தில் மகிழ்வின் வெயில் படரச் செய்தது. அவனிடம் பேச்சு கொடுத்து பேச்சு வாங்குவதில் அவள் தனி ஆனந்தம் கண்டாள்.

மற்றும் ஒன்றிரண்டு பேர்களிடமும் அவள் இப்படிப் பழகினாள்.

அவர்கள் அவளை அதிகமாகவே சீண்டினார்கள். அவர்களுடைய கேலியும் கிண்டலும் அவளுக்குப் பிடித்துத் தானிருந்தன. அன்றாட வாழ்க்கை 'போர் அடிக்காமல்' குளு குளு என்று அமைவதற்கு உதவும் ரசமான விளையாட்டுக்களாகவே அவள் அவற்றை மதித்தாள்.

அவள் இயல்பை கவனித்த நண்பன் ரத்னம் 'இதெல்லாம் எங்கே போய் நிற்குமோ!' என்று எண்ணிக்கொண்டான்.

மூன்று நான்கு நாட்களுக்குப் பிறகு, முன்னிரவு நேரம். இரவுச் சாப்பாட்டுக்கு ஒன்றிருவராக வந்து போவார்கள். அப்போது இன்னும் ஆட்கள் வரவில்லை.

மேஜைமுன் உட்கார்ந்து ஒரு பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்த புஷ்பா தூரத்தில் சந்திரன் வருவதை கவனித்தாள். வேடிக்கையாக அவனை திடுக்கிட வைக்க

வேண்டும் என்ற உந்துதல் அவளுக்கு ஏற்பட்டது. கதவுக்குப் பின்னால் மறைந்து நின்று கொண்டு, அவன் வந்ததும் 'பாவ்' என்று கூச்சலிட்டு அவனை மிரள வைக்கத் திட்டமிட்டாள்.

கதவின் பின்னே ஒளிந்து கொண்டாள். சிரிப்பு ஊற்றென அவளுள் குமு குமுத்தது. சிரமத்தோடு அடக்கிக் கொண்டு நின்றாள்.

செருப்புச் சத்தம் கேட்டது. கால் செருப்புகளைக் கழட்டும் ஓசை தொடர்ந்தது.

புஷ்பா 'பெ...பேபாவ்!' என்று கத்தியபடி வேகமாக வெளியே வந்தாள். அவள் எதிர்பார்த்தது நடக்கவில்லை.

அங்கே வந்தவன்— சந்திரன் இல்லை. அவளை கேலி செய்து, அவளது முகமாறுதல்களையும் அழகையும் ரசித்து மகிழ்கிற வேறொரு வாடிக்கைக்காரன் சுப்பையா.

கூச்சலிட்டபடி முன்னே பாய்ந்த புஷ்பாவை அவன் கைகள் நீட்டிப் பிடித்து, இழுத்து, இறுக அணைத்தான். அவள் திமிறத் திமிற அவன் பலவந்தமாக முத்தமிட்டான்.

கூச்சலிட்டு அலற அவளுக்கு பயம். உள்ளேயிருந்து அம்மாவோ அக்காவோ வந்துவிட்டால்? அவனுடைய செய்கை திகைப்பையும் திகிலையும் வளர்த்தது.

மேலும் அவன் என்ன செய்திருப்பானோ! நல்ல வேளையாக சந்திரன் வந்துவிட்டான். 'ஏய், என்ன இது! ஏ சுப்பையா, என்ன விளையாட்டு?' என்று சத்தம் போட்டான்.

சுப்பையா அவளை விட்டுவிட்டான்.

'இதுக்காகத்தான் பெண்கள் அடக்கம், ஒடுக்கமாக நடந்து கொள்ளனும்னு நம்ம பெரியவங்க சொல்லி வச்சாங்க. உன் விளையாட்டுத்தனம் தானே இவனுக்கு இந்தத் துணிச்சலைத் தந்திருக்கு!' என்று கண்டிக்கும் குரலில் சந்திரன் பேசினான்.

கண்கலங்கி முகம் சிவக்க நின்ற புஷ்பா கண்ணீர் சிந்தியபடி உள்ளே ஓடிப்போனாள்.

சுப்பையா சாப்பிடாமலே செருப்பை மாட்டிக்கொண்டு வெளியே போனான்.

புஷ்பா அம்மாவிடம் என்ன சொன்னாளோ, எப்படி கேட்டுக்கொண்டாளோ அம்மாவே உணவு பரிமாற வெளியே வந்தாள்.

மறுநாளிலிருந்து விளையாட்டுப்பிள்ளை 'பொந்துக் கிளி' ஆகி அடுக்களையினுள்ளேயே முடங்கிக் கொண்டது.



# சுதந்திரப் பறவைகள்

குறுக்குத்துறைக் கோயிலில் இன்னும் திருவிழாக் கூட்டம் இடித்து நெருக்கிச் சாடவில்லை.

அப்படி கும்பல் முட்டி மோதுவதற்குள் பெரியவர்களும் சின்னவர்களுமாய் ஆற்று நீரைக் கலக்கி 'குட்டைப்புழுதி' ஆக்குவதற்குள் நிம்மதியாய் குளித்து முடித்துவிட்டு நெருக்கடி இல்லாமல் ஆற அமர முருகனை தரிசித்து, மன நிறைவோடு வீடு திரும்பலாம் என்ற எண்ணத்தோடு, அவசரம் அவசரமாக சீக்கிரமே வந்த பக்தர்கள் தனித்தனிய ராயும் இருவர் மூவராயும், சிறுசிறு குழுவினராகவும் கோயிலை விட்டு வெளியே வந்து கல்பாலத்தின் மீது சாவகாசமாய் நடக்கும் காலைவேளை. அப்போதுதான் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தது.

பக்தர்கள் கும்பல் கூடுவதற்குள், அவர்களுடைய திரளான வருகையை எதிர்நோக்கி காசு சம்பாதிக்கும் நோக்கத்தோடு சீக்கிரமே வந்திருந்த சகலரகமான பிச்சைக்காரர்களும், கொழுந்து-மரு-செவ்வந்திப்பூ விற்கும் சில்லறை வியாபாரிகளும் கல்பாலத்தின் மீதும், கோவிலைச் சுற்றியுள்ள மணலிலும், வெளிப்பிரகாரத்திலும் முகாமிட்டு, அந்த இடத்துக்கு திருவிழாக் களை சேர்த்தவாறு காட்சி தந்தார்கள்.

அன்றுதான் வைகாசி விசாகம். விசாகம் என்றால் முருகனுக்கு உகந்தது. திருச்செந்தூருக்கு அடுத்தபடியாகக் கருதப்பட்ட குறுக்குத் துறையிலும் விசாகம் திருவிழா முக்கியமானது; கும்பல் சேர்ப்பது அந்த ஜில்லாவின் பலப்பல ஊர்களிலிருந்தும் சாமி கும்பிடவும், சும்மா பொழுது போக்கவும் ஆண்களும், பெண்களும் குழந்தை குட்டிகளோடு

'பொம்மெனப் புகுந்து மொய்ப்பது' அன்றைய விசேஷம் ஆகும். வண்டி கட்டிக் கொண்டுவருவார்கள். பஸ்களிலும் வந்து சேர்வார்கள். நடந்து வருவோர் எண்ணிக்கையும் மிக அதிகமே.

பக்கத்து கிராமம் ஒன்றிலிருந்து அதிகாலையிலேயே வந்துவிட்ட கைலாசம்பிள்ளை தாமிரவருணியில் குளிரக் குளிர நீராடிவிட்டு முருகனை தரிசித்து, நெற்றி நிறையத் திருநீறும், மார்பு முழுவதும் சந்தனமும் துலங்க, மகிழ்ச்சி யோடு திரும்பிக் கொண்டிருந்தார். பக்தி மீதுறப் பெரு விட்டாலும், சும்மா போய் வரலாமே என்றும் பக்கத்து வீட்டு அண்ணாச்சிக்குத் துணையாக என்றும் அவரோடு வந்த கந்தபிள்ளை, காதுகள் அவர் பேச்சைக்கேட்க, கண்கள் சுற்றிலும் நெடுக மேய, மெதுவாக நடந்தார்.

கல்பாலம் ஆரம்பிக்கிற இடத்தில் படிக்கட்டு ஆற்றங் கரையை ஒட்டி, அதன் மீது ஏறி உயர்ந்த ரஸ்தாவை அடைய வேண்டும். படிக்கட்டு, ஒரு புறத்தில் விசாலித்து ஒரு சிறு கோயிலுக்கு இட்டுச் சென்றது. பிள்ளையார் கோயில்.

ரோடிலிருந்து இறங்கி வருகிறவர்கள், பாலத்திலிருந்து எதிரேறி வரும் ஆட்களை விட்டு வழிவிலகுவதற்காக, பிள்ளையார் கோயிலைச் சுற்றிவருவதும் உண்டு.

அப்படி வந்தவர்களில் இரண்டுபேர் கந்தபிள்ளை பார்வையில் பளிச்சென்று பட்டார்கள். பெண்கள் நடுத்தர வயதினர்.

படிக்கட்டு வழியாக நேரே விருவிரென்று இறங்காமல், நின்று நின்று, வேடிக்கைப் பார்த்தும், எதுஎதையோ சுட்டிக்காட்டிப் பேசிச் சிரித்தும் மந்தகதியில் நகர்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களையே பார்ப்பதுபோல் கந்தபிள்ளைக்குப் பட்டது.

யாரோ நம்மை எதுக்குப் பார்க்கப் போறாங்க?— இப்படி அவர் மனம் முண முணத்தது. அவர் பார்வை அண்ணாச்சி பக்கம் புரண்டது.

பெரியவர் நேரே கண்பதித்தபடி, 'முருகா அப்பனே சண்முகா!' என்று குரல் கொடுத்தபடி நடந்து கொண்டிருந்தார். ரோடில் ஏறி, சிறிது தூரம் சென்று அங்குள்ள 'சைவாள்காப்பி' கிளப்பில் சூடாக ஒரு காப்பி சாப்பிட வேண்டும் என்ற மன அரிப்பு அவருக்கு. சுடச்சுட வடை இருந்தாலும் இருக்கும்; ரெண்டை உள்ளே தள்ளி, காப்பியும் குடித்தால் ஜம்னு இருக்கும் என்ற நினைப்பு அவரை இயக்கியது.

படி வரிசையில் கால் வைத்துவிட்டார் பெரியவர். அவர் இயங்குதலுக்கு 'ஸடன்பிரேக்' போடுவதுபோல வெடித்து வந்தது ஒரு அழைப்பு.

'கைலாசம் பிள்ளேய்!... ஓய் கைலாசம் பிள்ளேய்!'

யார் கூப்பிடுவது என்று திரும்பிப் பார்த்தார் பெரிய பிள்ளை. கந்தபிள்ளையும் அதிசயமாக நோக்கினார்.

'நான் தான்.... இப்படி வாங்க... என்ன கைலாசம் பிள்ளை, நாங்க நிற்பதை கவனிக்காமலே போறீகளே?' உரத்த குரலில் இப்படி ஒலிபரப்பி, கையை ஆட்டிக் கூப்பிட்டு நின்றது, பிள்ளையார் கோயில் பக்கம் தென்பட்ட பெண்களில் ஒருத்திதான்.

நெட்டை என்று சொல்லப்படவேண்டிய உயரம். கொஞ்சம் பருமன்தான் என நினைக்கத் தூண்டும் சதைப் பிடிப்பு. கருப்புமில்லை, சிவப்புமில்லை என்று தோன்றுகிற 'பொதுநிறம்' பெரிய முகத்துக்கு சிறிதாக அமைந்த கண்கள். எடுப்பாகத் தெரிந்த பற்கள். முகம் சிரிப்பாய் பூத்திருக்க, பற்கள் மிக எடுப்பாய் தென்பட்டன.

அவளை இனம் கண்டுகொண்ட சந்தோஷம் முகத்திலே ஒளிர கைலாசம்பிள்ளை அந்தப்பக்கம் போனார். மற்றவரும் அவரை தொடர்ந்தார்.

'நீங்க நிற்கிறதை நான் பார்க்கவே இல்லியே!' என்று தெரிவித்தார் பெரியவர்.

'என்ன சவுக்கியமெல்லாம் எப்படி?' என்று விசாரித்தவள், 'வாங்க, இங்கே ஒதுங்கி நின்று பேசலாம்' என்று பிள்ளையார் கோயிலில் சிறிது தள்ளி பக்தர் அலைகள் தொடாத வெளியில் போய் நின்றாள். அவள் கூட வந்தவளும் அவளை ஒட்டியே நகர்ந்தாள்.

மற்ற இருவரும் அந்தப் பக்கமாகப் போய் அவர்கள் எதிரே நின்றார்கள்.

'நீங்க பாலத்திலே வரையிலேயே நான் கண்டுபுடிச்சிட்டேன். மீனாட்சி கிட்டேயும் சென்னேன் அதோ கைலாசம்பிள்ளை வாறாரு; நம்மை பார்க்கிறாரான்னு பார்ப்போமின்னு. நீங்க என்னடான்னா தரையிலே எதையோ போட்டுட்டு அது கிடைக்குமான்னு தேடிக்கிட்டுப் போறவங்ககணக்கா, பார்வையை அங்கே இங்கே திருப்பாம நடந்து போறீக!'

இதை சொல்லிவிட்டு, தனது பேச்சை தானே ரசிப்பவள் போல் கடகடவென்று சிரித்தாள் அவள் மீனாட்சியும் 'குகுங்' சிரிப்பை சிந்தினாள்.

இவள் யாராக இருக்கும் என்ற எண்ணம் கந்தபிள்ளை முளைக்குள் சிறிது அரித்தது விடை காண முடியாததால், யாரோ, அண்ணாச்சிக்கு தெரிஞ்சவ போலிருக்கு என்று சிறு சொறிதல் சுகம் கண்டது.

'இப்பவும் ஊரோடு தான் இருக்கீகளா?' என்று அவள் கேட்டாள்.

'ஆமா வேறே எங்கே போறது?' என்று சலிப்புடன் சொன்னார் பெரியவர்.

'அங்கே என்ன பண்ணுதீக? பொழுது எப்படிப் போகுது?'

'சும்மா இருக்கேன்னு தான் சொல்லணும். விவசாயத்தை கவனிச்சுகிடுதேன்...... நான் என்ன கவனிக்கிறது! நடக்க வேண்டிய வேலைகள் அதது பாட்டுக்கு ஒழுங்கா நடந்து வருது... பொழுது போறதுக்கு என்ன! இருக்கவங்களுக்கும், செத்தவங்களுக்கும் பொழுது ஓடிக்கிட்டேதான் இருக்கு. இன்னைக்கு செத்தா நாளைக்கு ரெண்டாம் நாள் அப்படீன்னு சொல்லுவாங்க. இப்ப வருசம் பொறந்த மாதிரி இருக்கு, அதுக்குள்ளே எத்தனையோ மாசங்க ஓடிப் போயிட்டுது. பின்னே சொல்லுதீகளே!...'

கைலாசம்பிள்ளை இப்படித்தான். பேச வாய்திறந்து விட்டால், வார்த்தைகள் அப்புறம் குற்றால அருவிதான்.

அவள் சிரித்தாள்.

'கைலாசம்பிள்ளை அன்னைக்கு இருந்த மாதிரித்தான் இன்னைக்கும் இருக்காரு. அதே மாதிரி தான் பேசுதாரு...'

'அண்ணாச்சி எப்படி இருக்காக? விசாகத்துக்கு வரலியா?' என்று பிள்ளை அவளிடம் கேட்டார்.

'நல்லாத்தான் இருக்காக. நீங்க ரெண்டு பேரும் போயிட்டு வாங்க, நான் வரலேன்னிட்டாக...ஆமா, உங்களை பாளையங்கோட்டைப் பக்கமே காணமே? வெளியூரு எங்கும் போறதே இல்லையா?'

'ஆமா. வீட்டோட இருப்பதுதான் ரொம்ப சவுகரியம்னு தோணுது. எங்கெயும் ஊர்வழி போகணும்னாலே சிண்ட்ரம் புடிச்ச எழவாய் படுது. வேளா வேளைக்கு சாப்பிடறது, எதையாவது படிக்கிறது; இல்லேன்னா படுத்துத் தூங்கறது.

காலையிலே ஆத்துக்குப் போய் வாறது. சாயங்காலம் வயல் பக்கம் போயி சுத்திப் பாத்துட்டு வாறது. அதோடு சரி...'

'கைலாசம் பிள்ளை பாடு நிம்மதிதான். உம்ம்... கொடுத்து வச்சவரு ஐயா நீங்க!' என்றாள் அவள்.

சிரிப்பு ஜலதரங்க ஒலி என இசைத்தது அவளது பேச்சுக்கிடையே.

'அதுக்காக எங்களை எல்லாம் மறந்துடணுமா என்ன? ஒரு நா எங்க வீட்டுக்கு வாங்க. வடை பாயாசத்தோடு விருந்து வைக்கிறேன் கைலாசம் பிள்ளேய்!' என்றாள். கலீர்ச் சிரிப்பை ஒலிபரப்பினாள்.

தோழியும் சேர்ந்து நகைத்தாள்.

'சீக்கிரமே கோயிலுக்கு வந்துட்டீகளாக்கும்? வேடிக்கை விசேஷம் எல்லாம் இன்னமத்தானே இருக்கும்! இப்பவே ஊருக்குப் போயி என்ன பண்ணப்போறீக?' என்றும் வம்புக்கிழுத்தாள் அவள்.

'இப்பவே போகலே. அப்புறமும் கோயிலுக்கு வருவோம். இப்ப கும்பல் நெருக்கடி இல்லாம சாமி தரிசனம் செய்யலாமேன்னுதான்...' என்று அண்ணாச்சி இழுத்தார்.

'அதுவும் சரிதான்...கூட்டம் வந்துக்கிட்டே இருக்கு... அப்ப போயிட்டு வாங்க....மறந்திராதீக. பாளையங் கோட்டைக்கு அவசியம் வாங்க' என்று கட்டாயப்படுத்தும் குரலில் கூறினாள்.

'சரி, வாறேன்' என்று சொல்லிவிட்டு கைலாசம்பிள்ளை நகர்ந்தார். கந்தபிள்ளையும் தொடர்ந்தார்.

'இவ யாரு அண்ணாச்சி' என்று கந்தபிள்ளை கேட்க வாய் திறப்பதற்குள், 'இவ யாருன்னு தெரியுதா?' என்று மற்றவரே முந்திவிட்டார்.

'தெரியலியே அண்ணாச்சி!'

'பாளையங்கோட்டையிலே முன்னாலே நான் குடியிருந்த போது, பக்கத்து வீட்டிலே சாமியார் அண்ணாச்சின்னு ஒருத்தர் இருந்தாரே, அவரோட பெண்டாட்டிதான் இவ. பஞ்சவர்ணம்னு பேரு.'

கந்தபிள்ளையின் மூளைக்குள் இருண்டிருந்த பிரக்ஞைப் பகுதிகளில் ஒளிப்பொறி தெறிக்க உதவுகிற ஸ்விச் ஆயிற்று இந்த அறிமுகம்.

'ஓ அவளா! பதினைந்து வருஷங்களுக்கு முன்பு பார்த்திருக்கேன். உங்க வீட்டுக்கு வந்த போதெல்லாம்தான். இடைக்காலத்திலே அவளை பார்த்ததில்லையா? அவளும் ஆளு ரொம்பவும் மாறிப் போயிருக்கா. உருவத்திலேயும் தான்' என்று கந்தபிள்ளை தெரிவித்தார்.

—அந்தக் காலத்திலே இவள் இப்படியா இருந்தாள்? நாகரிகமாக டிரஸ் செய்து கொள்வா அதுசரி. வீட்டிலே பொந்துக்கிளி மாதிரி இருப்பா. எப்பவும் அடுப்பங்கரையிலே அடுப்படி வேலை முடிந்தால், இரண்டாம் கெட்டிலே வாசல்படியிலே தலைவைத்து படுத்தபடி, ஏதாவது கதைப் புத்தகம் அல்லது பொழுதுபோக்குப் பத்திரிகை படிச்சி கிட்டிருப்பா. வீட்டுக்கு யாராவது வந்தா, இவ வெளியே வந்து எட்டிப்பார்த்துவிட்டு. திரும்பவும் உள்ளே போயிருவா குடிக்க தண்ணீர் கேட்டால், செம்பிலே தண்ணீர் கொண்டு வந்து, இந்தாங்க என்று கொடுப்பா. கைலாசம்பிள்ளை மாதிரி பழக்கமான ஆளைக் கண்டதும் சிரிப்பா; ஒன்றிரண்டு வார்த்தை பேசுவா. புருசன் கண்டிப்பு அதிகம் இருந்ததாத் தோணிச்சு. தெருவிலே போற ஆளை ஓய் கைலாசம் பிள்ளேன்னு ஓங்கிய குரல் எழுப்பிக் கூப்பிடும் துணிச்சல் அந்நாளையப் பஞ்சவர்ணத்திடம் இருந்ததே இல்லே. ரொம்ப அடக்கமாக இருந்தாள்.

கந்தபிள்ளை தனது நினைப்பிலேயே மிதந்தவராய் நடந்தார்.

'என்ன யோசனை?' என்று பெரியவர் கேட்கவும், 'இல்லே....காலவோட்டத்திலே ஒவ்வொருத்தர் என்னமா மாறிப்போயிருறாங்க பார்த்தியான்னு நெனச்சேன். அது தான்' என்றார் மற்றவர்.

இதை அவர் அன்று பிற்பகலில் மீண்டும் சொல்லிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

குறுக்குத்துறை காப்பி கிளப்பில் காப்பியும் வடையும் கைலாசம்பிள்ளைக்கு திருப்தி தரவில்லை. 'விசாகக் கூட்டமில்லா! காப்பியை கழுனித்தண்ணி ஆக்கிப்போட்டான். வடையை இம்புட்டுப்போலே தேச்சுப் போட்டான். சவத்துப்பயலுக! சம்பாதிக்கணும்கிற ஆசை யாரைத்தான் சும்மா விட்டுது?' என்று முனகினார்.

இரண்டு பேரும், ஈரவேட்டியை விரித்து காற்றிலும் வெயிலிலும் உலர்வதற்காக உயர்த்திப் பிடித்தபடி மெதுவாக நடந்தார்கள். டவுன்போய் சேர்வதற்குள் வேட்டி காய்ந்து விட்டது. அதை மடித்து பைக்குள் வைத்துக்கொண்டு 'போத்தி ஓட்டல்' தேடிப் போனார்கள். அங்கே பூரி, காப்பி சாப்பிட்ட பிறகு, காந்திமதி நெல்லையப்பர் கோயிலுக்குப் போய் கும்பிட்டு, சாவகாசமாகப் பிரகாரம் சுற்றினார்கள். முன்மண்டபத்தில் ஹாயாக உட்கார்ந்து பொழுதுபோக்கினார்கள். பிறகு, தெரிந்தவர் ஒருவரின் ஜவுளிக்கடையில் அமர்ந்து ஊர் கதை பேசி மகிழ்ந்தார்கள்.

நேரமாயிட்டுது என்று மனம் உணர்த்தவும் எழுந்து நடந்தார்கள். 'குமார விலாஸ்' ஓட்டலில் எலுமிச்சஞ் சாதமும் 'காரவடை'யும் காப்பியும் சாப்பிட்டார்கள். மறுபடியும் குறுக்குத் துறைக்கு நடந்தார்கள். ஒன்றரை மைல் ஒரு தூரமாகத் தெரியவில்லை. வழி நெடுக வண்டிகளும் சைக்கிள்களும் பாதசாரிகளுமாக ஜேஜே என்றிருந்தது.

குறுக்குத் துறையிலும், ரோட்டில், தோப்புகளில். மரங்களின் கீழே, மற்றும் கோயிலைச் சுற்றிலும் ஜனத்திரள். வண்டிகள், சைக்கிள்கள், இதர வகை இயந்திர வாகனங்கள் மிகமிக.

மாம்பழ வியாபாரம் வெகு அதிகமாக நடைபெற்றதால், மாம்பழங்களை வாங்கிக் கடித்துத் தின்றபடி காட்சி அளிக்கும் பொம்பிளைகளும் பிள்ளைகளும் ஆண்களும் நெடுகிலும் தென்பட்டார்கள்.

நாகரிகத் தோற்றம் கொண்ட பெண்கள்கூட கூச்சத்தை ஒதுக்கிவிட்டு மாம்பழத்தைக் கடித்து சுவைத்து ரசித்து மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

கந்தபிள்ளைக்கு அவை எல்லாம் ரசிக்கப்படவேண்டிய இனிய காட்சிகள் ஆயின.

அப்படிப் பார்த்து மகிழ்ந்து நடந்தபோதுதான் அவர்கள் எதிர்ப்பட்டார்கள். பஞ்சவர்ணமும் மீனாட்சியும்.

ஆளுக்கு ஒரு மாம்பழத்தைக் கடித்துச் சுவைத்தபடி தெருவோடு நடந்து கொண்டிருந்தார்கள். ஏதோ பேசிச் சிரித்தபடி.

'இந்த ரெண்டு பேரும் ஆத்திலே என்ன அட்டகாசம் பண்ணினாங்க தெரியுமா! குளிக்கிறோம்னிட்டு தண்ணியிலே ஓடிப்பிடிப் பிடிச்சு, ஒருத்தி மேல ஒருத்தி தண்ணியை வாரி இறைச்சு, சத்தம் போட்டுச் சிரிச்சு...நல்ல வேடிக்கைதான். எரிஞ்சு விழுந்தவங்களும் இருந்தாங்க. பக்கத்திலே குளிச்சுக்கிட்டு நின்னவங்க, மேலே தண்ணிபட்டா சும்மா பொறுத்துக்கிட்டா இருப்பாங்க?'

ரோடின் ஓரத்தில் நிழலில் ஒதுங்கி நின்றவர்களில் ஒருவன்தான் இப்படிச் செய்தி ஒலிபரப்பினான்.

இன்னொருவன் சொன்னான்; 'இவங்க குடைராட்டிலே ஏறிச்சுற்றினது உமக்குத் தெரியாதா? அடாடா, உம்ம கண்கள் புண்ணியம் செய்யலை வே!'

'அப்படியா! அது எனக்குத் தெரியாதே! காண வேண்டியதைக் காணத் தவறிவிட்டதில் உண்மையாகவே· வருத்தம் கொண்டான் அவன் என்பதை அவனுடைய குரல் காட்டியது.

'ராட்டினம் வேகமாகச் சுற்றியபோது, இவங்க கூச்சல் போட்டும், சிரித்துக் கூவியும், என்னமா ரசிச்சாங்க தெரியுமா! சின்னப் புள்ளெக பிச்சை வாங்கணும், போம்!' என்று ரசித்துச் சொன்னான் முதல் நபர்.

இதற்குள் பஞ்சவர்ணமும் தோழியும் பக்கத்தில் வந்துவிட்டார்கள். கைலாசம் பிள்ளையைப் பார்த்ததும், அவள் முகம் ஒளிவீசச் சிரித்தாள்.

'இன்னும் நீங்க ஊருக்குப் போகலியா?' என்று கேட்டாள். 'மாம்பழம் சாப்பிடுறீகளா?' என உபசரித்தாள். திடீரென நினைத்துக்கொண்டவள் போல், நாங்க ராட்டினத்திலே ஏறிச் சுத்தினோமே! நீங்க பாத்தீகளா?' என்று கேட்டாள். ஒரு சிறுமியின் குதூகலம் அவள் கேள்வியில் தொனி செய்தது.

'நாங்க இப்பதான் டவுனிலேருந்து வந்தோம்' என்றார் கை. பிள்ளை.

'முதல்லே குடைராட்டினத்திலே ஏறினோம். ஜாலியா இருந்தது. அப்புறம் தொட்டில் ராட்டுலே, மேலே போயி கீழே இறங்கி வந்து, அப்புடி மேலும் கீழுமாச் சுற்றுமே அதிலே ஏறினோம். ஐயோடி, ஒரே பயமாப் போச்சு, குபீர்னு கீழே வரும்போது என்னமா இருந்தது தெரியுமா? நான் ஒன்னு கூவிக்கிட்டு இவளை கட்டிப்பிடிச்சுக்கிட்டேன் இவ

ஆவிச் சேர்த்து என்னை புடிச்சுக்கிட்டா. அப்டி சுத்திச்சுத்தி அதுவும் ஒரு தமாஷ்தான்' என்று கூறினாள். சிரித்தாள்.

அக்கம்பக்கத்தில் நின்றவர்கள் அதிசயப் பிராணிகளை பார்ப்பது போல் தங்களையே கவனிப்பதை பஞ்சவர்ணம் கவனிக்கவேயில்லை. தனது சந்தோஷத்தில் பூரணமாக ஆழ்ந்திருந்தாள் அவள்.

பிறகு 'ரொம்ப நேரமாச்சு. நாங்க போகணும்' என்றாள். 'வாறோம்' என்று சொல்லிவிட்டு மீனாட்சியுடன் நகர்ந்தாள்.

அவர்களைப் பற்றி வம்பளந்தவர்கள், கைலாசம் பிள்ளையும் மற்றவரும் அவர்களுக்குத் தெரிந்தவர்கள் என்று புரிந்து கொண்டதும், நைசாக அங்கிருந்து நகர்ந்து விட்டார்கள்.

பஞ்சவர்ணமும் சிநேகிதியும் போன பிறகு, கைலாசம் பிள்ளை 'தம்பி. நீரு சொன்னது சரிதான். அவ ரொம்பத் தான் மாறிப்போனா' என்றார். 'வீட்டிலே அடக்கமா, சாதுவா இருந்தவ ஏன் இப்படி மாறிப் போனாள்?' என்று தனக்குத் தானே உரத்து சிந்திப்பவர் போல் பேசினார்.

'எனக்கு ஒண்ணு தோணுது அண்ணாச்சி' என்று கந்தபிள்ளை இழுக்கவும், 'என்ன... சொல்லும்' என்று அவர் தூண்டினார்.

'வீட்டுக்குள்ளே அதிகமாக ஆக்கினைகள் பண்ணி அதட்டி மிரட்டி அடக்கி வைக்கப்படுறவங்க, சந்தர்ப்பம் கிடைக்கிற போது, வெளியிலேயோ வீட்டுக்குள்ளையோ, சுயேச்சையா இருக்க நேர்கிற போது, சர்வ சுதந்திரமாக அட்டகாசம் பண்ணத் துணிகிறாங்க. அப்பாமார்கள் கறார் கண்டிப்பு பண்ணி, பயப்படுத்தி அமைதியை நிலைநாட்ட முயல்கிற வீடுகளிலே, அந்த அப்பா ஆபீசுக்கோ வேற எங்கேயோ வெளியேறுகிற போது, பிள்ளைகள் கட்டவிழ்ந்து

விடப்பட்ட குட்டி மிருகங்க மாதிரி ரகளை பண்றது இயல்பாக இருக்கு. நீங்களும் எத்தனையோ வீடுகளிலே பாத்திருப்பீங்க. அதே மாதிரித்தான் பெரிய பொம்பிளைக சிலபேரும்—புருசனால் கார்வார் பண்ணப்பட்டு அடக்கப் படுகிற மனைவி மாருகளிலே சிலரும் நடந்து கொள்றாங்க 'புருசன் தலை மறைஞ்சதும் இஷ்டத்துக்கு செயல் புரிவது அவங்களுக்கு பழக்கமாகவும் வழக்கமாகவும் ஆகிப்போகுது. பஞ்சவர்ணமும் அவள் தோழியும் அப்படிப்பட்டவங்கதான்னு நினைக்க வேண்டியிருக்கு' என்று கந்தபிள்ளை லெக்சரடித் தார்.

'உம்....இருக்கும் இருக்கும்' என்று தலையை ஆட்டினார் மற்றவர்.

'இன்னும் ஒண்ணு. கும்பல் சில பேருக்கு துணிச்சல் உணர்வு உண்டாக்குது. கூட்டம் நடுவிலே, நம்மை யாரும் கண்டுக்கிடமாட்டாங்க—நமக்குத் தெரிஞ்சவங்க இங்கே யாருமில்லே—என்ற தைரியத்துலே, குறும்புக் குணமும் விளையாட்டுப் புத்தியும் பெற்றவங்க துணிஞ்சு என்னென் னவோ பண்ணுவதும் சகஜமா இருக்கு. அதுலே அவங்களுக்கு அலாதியான சந்தோஷம் ஏற்படுது. இவங்க ரெண்டுபேருக்கும் அப்படி ஒரு துணிச்சலும் சந்தோஷமும் ஏற்பட்டிருக்கும்னு தோணுது. உள்ளூரிலேயும், தெரிஞ்சவங்க மத்தியிலும் இவங்க இப்படி எல்லாம் செய்வாங்களா? யோசிக்க வேண்டிய விஷயம்' என்றும் கந்தபிள்ளை கூறினார்.

'ஆமா ஆமா' என்று தான் சொல்ல முடிந்தது அண்ணாச்சியால். □

# ஒரு சின்னக் கேள்வி

திருவாளர் ஞானப்பிரகாசம் இருக்கிறபக்கம் தலை காட்டுவதற்கே இளைஞர்கள் தயங்குவார்கள், சின்ன வகுப்புக்களில் படிக்கிற பையன்கள் பயப்படுவார்கள்.

காரணம் இல்லாமல் இல்லை. ஞானப்பிரகாசம் தனது அறிவுப் பேரொளியை வெளிச்சமிடுவதில் ஆர்வம் உடையவர். யாரிடமும் ஏதாவது கேள்வி கேட்டு, அவரவருடைய அறிவுத் திறமையை சோதிக்க வேண்டும் என்ற மனத்தினவு கொண்டவர். கேள்வி கேட்கப்படுகிறவரை திணறவைப்பதில், திகைக்கும்படி பண்ணுவதில், பதில் சொல்லத் தெரியாமல் ழுழிக்கவைத்துப் பார்ப்பதில் அவருக்கு அலாதியான சந்தோஷம்.

இதற்காக என்றே அவர் ஏகப்பட்ட விஷயங்களை தெரிந்து வைத்திருந்திருந்தார். கையில் அகப்படுகிற சகலவித மான பத்திரிகைகளையும் நிதானமாக மேய்ந்து, துணுக்கு களையும் அறுவை ஜோக்குகளையும், புதிர்களையும் விழுங்கி அசைபோட்டு மகிழ்வது அவருடைய சுபாவமாகும்.

அவரை அணுகிப்பேச்சுக் கொடுக்கிறவர்களை பிரமிக்க வைக்க வேண்டும் என்ற ஆசையோடு அவ்வப்போது அவர் கேள்விகளையும் தகவல்களையும் உலுப்புவார்.

இதுவரை வரலாறு ஐந்து பேர்களைத்தான் உலகமகா வீரர்களாக ஏற்றுக் கொண்டிருக்கிறது. அவர்கள் யார் யார் தெரியுமா? என்று ஞானப்பிரகாசம் கேட்பார்.

உனக்கு இதெல்லாம் எங்கே தெரியப் போகுது! திவ்யமா மூக்குமுட்ட தின்னத்தெரியும்; வேறென்ன தெரியும் என்று

சொல்லாமல் சொல்கிற ஒரு பார்வையை எதிராளி மேல் நிறுத்தி லேசாகச் சிரிப்பார்.

அந்த தோரணையைக் கண்டே மற்றவன் மிரண்டு விடுவான். விழித்தபடி நிற்பான்.

'மகா அலெக்சாந்தர், ஜூலியஸ் சீசர், நெப்போலியன் போனபார்ட், ஜெங்கிஸ்கான் தி ஹெட் ஹன்டர், அடால்ப் ஹிட்லர் உலக மகாவீரர்கள் இந்த ஐந்து பேரும்தான் என்று அடித்துச் சொல்வார் ஞானப் பிரகாசம்.

அடுத்தபடியாக தனது மகத்தான இன்னொரு கேள்வியை வீசுவார் அவர்: 'ஜனசமுதாயத்துக்கு— உலகம் பூராவுக்குமே— மகத்தான நன்மை புரிந்த மாமனிதர்கள் மூன்றே மூன்று பேர்தான். அவர்கள் யார்? அவர்கள் என்ன செய்தார்கள்?

அவரிடம் பேசவந்தவர் அப்பாவித் தனமாக முழிப்பதைத் தவிர வேறு என்ன பண்ண முடியும்!

ஞானப்பிரகாசம் குதூகலமாகச் சிரிப்பார். 'அமெரிக்க ஜனாபதி ஆபிரகாம் லிங்கன், மாபெரும் ரஷ்யதலைவர் லெனின் இந்தியாவின் தேசப் பிதா மகாத்மா காந்தி, இந்த மூவர் தான் மனித குலத்துக்கு நிலையான நன்மை செய்திருப்பவர்கள். ஆபிரகாம் லிங்கன் அடிமைத்தனத்தை. அடிமை வியாபாரத்தை, ஒழித்தார். லெனின் ஏழை எளியவர்கள்; பாட்டாளிமக்களுக்கு வளமான வாழ்க்கை கிட்ட வழி வகுத்துக் காட்டினார். மகாத்மா காந்தி தீண்டாமையை அகற்றி அகிம்சை முறையைக் கையாண்டு, வெற்றி பெறும் வழியைக் காட்டினார்.... இது மாதிரி விஷயங்களை எல்லாம் தெரிந்து கொள்ளணும், பிரதர்! பொது அறிவை விருத்தி செய்து கொள்ளணும்' என்று உபதேசங்களை உலுக்கித் தள்ளுவார்.

எதுக்கு வீண்வம்பு! கொம்பு உள்ள பிராணிகளைக் கண்டால் தூர விலகிப்போகணும் என்பார்கள். இந்தக் கொம்பர் பக்கம் போகாமல் இருப்பதும் நல்லதுதான் என்று அவரை அறிந்தவர்கள் எண்ணலானார்கள். ஞானப் பிரகாசம் இருக்கும் இடத்தைத் தவிர்த்தார்கள். அவர் தூரத்தில் வருவது தெரிந்தாலே, வழி விலகி சந்து பொந்து களில் புகுந்து போகலானார்கள்.

படிக்கிற பையன்களிடம், அவர்கள் அறிவை சோதிக் கிறேன் என்று சொல்லி, எவரெஸ்ட் சிகரத்தின் உயரம் எவ்வளவு? அதுக்கு அடுத்து உயரமான சிகரம் எது? உலகத்தில் மிக நீளமான ஆறு எது? முத்துக்கள் எத்தனை நிறங்களில் கிடைக்கின்றன? என்று இப்படி எது எதையோ கேட்டு அவர்களை மிரளச் செய்வார்.

சிலசமயம் குதர்க்கமான கேள்விகள் கேட்பார்.

—ஆனா வந்து ஆவன்னாவின் அம்மா, ஆனால், ஆவன்னா ஆனாவின் மகன் இல்லை, அப்படியானால் ஆனாவுக்கு ஆவன்னா என்ன வேண்டும்?

பையன்கள் தலையைச் சொறிவார்கள். 'ஞானப் பிரகாசம் கனைப்பார்: அட மண்டூகங்களா! மடசாம்பிராணி களா! மக்குப் பிளாஸ்திரிகளா! ஆனாவுக்கு ஆவன்னா மகள், இது கூடத் தெரியலியே மண்ணாந்தைகளா!'

உம்ம ஜெனரல் நாலஜில் இடி விழ! என்று பையன்கள் கரித்துக் கொட்டுவார்கள், மனசுக்குள் தான். தங்கள் எரிச்சலையும் ஆத்திரத்தையும் வெளிப்படையாகக் காட்ட முடியாது உள்ளத்தில் குமுறுவார்கள்.

அவர்கள் சந்தோஷப்படும் படியாக அவரை மடக்கிவிடக் கூடிய திறமைசாலி ஒருவன் வந்து சேர்ந்தான். ஒரு மாணவன் தான்.

அயலூரிலிருந்து வந்தான் சிதம்பரம். பத்தாவது படிப்பவன். யாரையும மதிக்காத இயல்பு கொண்டவன். கொஞ்சம் புத்திசாலி. அதைவிடக் குதர்க்கமும் வக்கிரப் போக்கும் சிறது அதிகமாக உடையவன்.

அவனிடம் ஞானப்பிரகாசத்தின் போக்குகள் பற்றி பையன்கள் கதைகதையாய் சொன்னார்கள்.

'அவரை நான் பார்க்கணுமே!' என்று துடித்தான் சிதம்பரம்.

'உன்னிடம் கேள்விகள் கேட்டு உன்னை அழ அழப்பண்ணிவிடுவார் அவர்?' என்றான் ஒருவன்.

'எந்த மம்மா வந்தாலும் ஐயாகிட்டே அவரு பருப்பு வேகாதுன்னேன், தெரியுமா?' என்று ஜம்பம் அடித்தான் சிதம்பரம்.

பந்தயம் கூறி சவாலிட்டார்கள் உள்ளூர் பையன்கள்.

'ஓகோன்னானாம்! அதையும் பார்த்துப் போடுவோமே!' என்றான் சிதம்பரம்.

ஞானப்பிரகாசத்திடம் அவனும் இன்னொருவனும் போனார்கள். அறிமுகப்படலம் நடந்து முடிந்தது.

பெரியவர் வழக்கம்போல் கேள்விகள் கேட்டார். இடையே 'பொடி வைத்து' ஒரு கேள்வி:

'எஸ்.பி. முத்துராமன் போலீசுக்குப் பயப்பட மாட்டார். அவர் பயப்பட வேண்டியதுமில்லை. ஏன்?'

'அவரே எஸ்பி ஆச்சே!' என்று சொன்ன சிதம்பரம். "நீங்க படித்த பத்திரிகையிலேயே இதை நானும் படித்தேன். வேறே ஒரிஜினலா ஏதாவது கேளுங்களேன்' என்றான்.

அறிவின் சோதனையாளருக்கு இது எதிர்பாராத அனுபவம். கொஞ்சம் திகைத்து உட்கார்ந்து விட்டார்.

'நீங்களே எல்லோரையும் கேள்விகள் கேட்கிறீர்களே நான் உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் சொல்லுங் கள் பார்ப்போம்' என்றான் பையன்.

அவனோடு வந்த பையனுக்கு ஒரே பிரமிப்பு. இதற்குள் வேறு சில இளைஞர்களும் வந்து சேர்ந்திருந்தார்கள்.

ஞானப்பிரகாசம் தலையாட்டுவதற்கு முன்பே சிதம்பரம் கேள்வியை உதறினான்.

'கடவுள் கருணை மயமானவர். நமது பாபங்களை மன்னிக்கும் அருள் உள்ளம் கொண்டவர். அவரது அருள் நிறைந்த மன்னிப்பைப் பெற நாம் என்ன செய்யவேண்டும்?'

'இதயபூர்வாக பிரார்த்தனை பண்ணவேண்டும்' என்றார் பெரியவர்.

'இல்லே, நாம் பாபங்கள் செய்யவேண்டும்! பாபங்கள் செய்தால்தானே கடவுளின் மன்னிப்பை பெறமுடியும்? மனிதர்கள் பாபமே செய்யாவிட்டால், கருணை மயமான கடவுள் எப்படி மன்னிக்க இயலும்?' என்று வாதாடினான் சிதம்பரம்.

ஓகோகோ என்று கூவி கைதட்டி ஆர்ப்பரித்தார்கள் கூடி நின்ற இளைஞர்கள்.

வெற்றிப் பெருமிதத்தில் மிதந்த சிதம்பரம், 'இன்னொரு சின்னக்கேள்வி. ஐயா!' என்றான்.

ஞானப்பிரகாசம் இதுவரை எதிர் கொண்டிராத புதிய அனுபவம் இது. இப்படிச் சொல்லுவது தப்பு என்று கண்டிக்கவும் முடியவில்லை; பையனின் புத்தி சாதுரியத்தைப் பாராட்டவும் இயலவில்லை அவரால்.

'ஊம்ங்' என உறுமல் போல் ஒரு ஒலியை அவர் வெளிப் படுத்தினார்.

ஞானப்பிரகாசத்தின் முகம் கறுத்தது. அவருக்கு கோபம் பொங்கி வந்தது. 'ஏய் அயோக்கியா என்னிடம் கேள்வி மேல் கேள்வி கேட்கவாடா வந்தே?' என்று சீறினார்.

சிதம்பரம் அமைதியாகப் பேசினான். 'ஏன் ஐயா கோபப்படுகிறீர்கள்? நீங்கள் மட்டும்தான் கேள்வி மேல் கேள்வி கேட்கணும், மற்றவங்க கேட்கப்படாதுங்கிறது என்ன நியாயம்?' என்றான்.

மற்றப் பையன்கள் உற்சாகமாகச் சிரித்து, கை கொட்டினார்கள்.

பெரியவரின் ஆத்திரம் அதிகரித்தது. 'போங்கடா இங்கேயிருந்து. எனக்கு வாற வரத்துலே கையிலே அகப் படுறவனை தொலிச்சுப்போடுவேன் தொலிச்சு!' என்று கூப்பாடு போட்டார்.

'ஐயா ஐயா, மெதுவா, உங்களுக்கு ரத்தக் கொதிப்பு எதுவும் இல்லையே? அப்புறம் ரொம்ப டேஞ்சர் ஆயிடப் போவது, டவுனிலே ஒருத்தருக்கு அப்படித்தான் ஆயிட்டுது' என்று சிதம்பரம் சொன்னான். திரும்பிப் பாராமலே நடந்தான்.

பட்டி மன்றத்தில் வெற்றி பெற்ற பேச்சுப்புலியை சூழ்ந்து பாராட்டி நடக்கும் வியப்பர்கள் போல் மற்றப் பையன்கள் அவனைத் தொடர்ந்தார்கள். □

# அவள் சிரித்தாள்!

அவள் குற்றம் செய்தவள். கண்டுபிடிக்க வேண்டிய முறைப்படி கண்டுபிடித்து, நிருபிக்கப்பட வேண்டிய விதிப்படி 'கையும் களவுமாக'க் குற்றம் சாட்டப்பெற்று, கைது செய்யப்பட்டவள்.

அவள் பெயர் இந்திரா என்று தெரிவித்தாள். அதுவே அவளுடைய நிரந்தரமான பெயராக இருந்தாக வேண்டும் என்கிற கட்டாயம் எதுவும் இல்லை. இவளே வேறு தெருவில் ஜெயஸ்ரீ என்றோ, ராதா என்றோ பெயர் சொல்லியிருந்திருக்கக் கூடும். இன்னொரு ஊரில் செல்லம்மா ஆகவோ, சிவகாமி அல்லது சுப்பம்மா என்றோ நாளோட்டியிருக்கக் கூடும்.

பார்க்கப்போனால், பெயரில் என்ன இருக்கிறது! அவள் செய்த தொழில்தான் குற்றமானது; தண்டனைக்கு உரியது. அதற்காகத்தானே அவளை சட்டத்தின் பாதுகாவலர்கள் பிடித்திருந்தார்கள்? அதற்காகத் தானே உரியமுறையில் விசாரணை நடத்தி, நீதியின் பெயரால் தண்டனையும் கொடுக்கப்படவிருந்தது?

உணர்ச்சி உந்துதலினால், சதைத் தினவினால், மன அரிப்பினால், பணத் திமிரினால், புறக் காரணம் எதுவாய் இருந்தால்தான் என்ன?- தூண்டப்பட்டு, அவள் துணையை நாடி வந்தவர்கள் பலரும் இஷ்டம்போல் பேர் சொல்லி அவளைக் கூப்பிடவில்லையா என்ன? ஏட்டி, ஏய், இந்தா, ஏ புள்ளே, ஏ குட்டி என்ற தன்மையில் எல்லாம் அவளை அழைக்கத்தான் செய்தார்கள். அவளோடு பழகினார்கள். அவள் பிழைப்புக்காகச் செய்து வந்த தொழிலில், அவளுக்கு பிஸினஸ் வெற்றி தேடித்தந்த கூட்டாளிகளாய் பழகிய சமூக

ஆண்கள் இப்போது குற்றவாளிகளாய் பதிவு செய்யப்பட வில்லை....

இந்திரா திடீரென்று சிரித்தாள். இதை எண்ணி அல்ல.

ஒருவன் வந்தான். வழக்கம்போல் பழகினான். பணம் தந்தான். பிசினஸ் ரீதியாக எல்லாம் நடந்தது. பின்னாடியே சட்டத்தின் பேரால் காவலர் வந்தார். முன்னதாகவே அடையாளமிடப்பட்ட நோட்டுகள் என்றார் பிடித்தாச்சு என்றார். விபசாரம் செய்தது குற்றம் என்று அறிவித்தார். அனைத்தும் உரிய முறைப்படி நடைபெற்றன...

இந்திரா இப்போது சிரித்தாள். நாடக ரீதியாக இந்த நடவடிக்கையை எண்ணி அல்ல. நான் செய்தது இழிவான தொழில் என்றால், என்னைப் போன்றவர்கள் வயிற்றுப் பிழைப்புக்காக மேற்கொண்டிருக்கிற மோசமான தொழிலைக் கண்டுபிடித்து, நிரூபிப்பதற்காக நீங்கள் கையாள்கிற நடை முறைகள் மட்டும் மேலானவையோ என்று அவள் மனம் கேட்டதை ஒலிபரப்பி அவள் சிரிக்கவில்லை.

அவள் கண்முன்னே ரஸ்தா நீண்டு கிடந்தது. நாகரிகப் பெரு நகரத்தின் முக்கிய ரோடுகளில் ஒன்று நாகரிக உயிரோட்டம் அவசர வேகத்தில் இயங்க உதவிக் கொண் டிருந்த நரம்பு.

அப்போது ஒரு ஸ்கூட்டர் மிதப்பது போல் வழுக்கிச் சென்றது. அதில் இரண்டு பேர் ஒருவனும் ஒருத்தியும் அந்த ஒருத்தி இந்திராவினால் பல சந்தர்ப்பங்களில் தரிசிக்கப் பட்டிருந்த யுவதி. ரொம்ப ஸ்டைல். பகட்டுப் பூச்சிபோல், இளைஞன்மீது ஒட்டிக்கொண்டிருந்தாள். அவன் தோள்களில் கைபோட்டு முகம் சிரிப்பின் காடு. ஏதோ சந்தோஷ விஷயம் போலும் சவாலைச் சமாளிக்கிற காரியம் போலும். சிரித்த படியே, 'பார்ப்போமா? பார்த்துப் போடுவோம்' 'அதையும்

தான் பார்ப்போமே என்று சொற்களை உதறிக்கொண்டிருந் தாள். அவன் திரும்பித் திரும்பி என்னவோ பேசியபடி ஸ்கூட்டரை இயக்கினான்.

'ஜாலிப் பறவைகளே! நேரே ரோட்டைப் பார்த்தபடி சவாரி போங்க. இல்லேன்னாக்க ஆஸ்பத்திரிக்கோ சுடுகாட்டுக்கோ போக நேரிடும்!' என்று எச்சரிக்க அங்கே யாரும் இல்லை.

இந்திரா அவர்களைப் பார்த்தாள். ஒகோன்னாளாம்!' என்று சீட்டியடித்தது அவள் மனக்குறளி.

இந்த சுந்தரியை நேற்று மாலை வேறொரு சுந்தரனோடு பார்த்தேனே. இதே மாதிரி ஜாலியாகத்தான். அப்போ இவள் கைகள் அவன் வயிற்றுப்பக்கம் சுற்றிப் பிடித்திருந்தன; தலை தோள்மீது சாய்ந்திருந்தது. இவள் காலேஜ் மாணவி போலிருக்கு; அவன் மாணவனாக இருப்பான்.

சுந்தரி வெவ்வேறு சுந்தரன்களோடு ஸ்கூட்டரில் போவதை சினிமா தியேட்டரில் மிக மகிழ்ச்சியோடு காணப் படுவதை நாகரிக ஓட்டல்களில் வளையவருவதை இந்திரா அடிக்கடி கவனித்திருக்கிறாள்.

'இதுக்குப் பேர் என்ன?' என்று கேட்டது அவள் அறிவு. நாகரிகம் என்று இருக்கும் சுமுகமான பழக்கம், அல்லது சினேகம், அல்லது இப்படி ஏதோ ஒன்று என்று மனக்குரல் பேசியது.

உடனேதான் அவளுக்கு சிரிப்புவந்தது, சிரித்தாள்.

காவலர் முழித்துப் பார்த்தார். அவள் 'மூஞ்சியை உம்மென்று' வைத்துக்கொண்டு, ரோட்டை நோக்கினாள்.

ஆபீஸ் நேரம். அலுவலகங்களை நோக்கி பலப்பலர் போய்க்கொண்டிருந்தார்கள். நவயுவர்களும் நவயுவதிகளும்

நிறைய நிறைய, மாடர்ன் ஸ்டைல்களையும் அவற்றை உயர்வு படுத்திக் காட்டக்கூடிய நாகரிகத் துணிமணி ரகங் களையும் அறிமுகம் செய்துகொள்ள வேண்டும் என்றால், இப்பேர்ப்பட்ட ஒரு பாதை ஓரத்தில் அரைமணி நேரம் நின்று பார்த்தால் போதும்.

இந்திரா பார்த்துக் கொண்டிருந்தாள். திடீரென்று சிரித்தாள்.

'ஆபீசில் உட்கார்ந்து அலுவல் புரிவதற்கு இப்படி எல்லாம் சிங்காரம் பண்ணிக் கொண்டு போக வேண்டுமா? ஏதோ ஏக்ஸிபிஷனிலே கலந்துகொள்ளப் போற மாதிரி? விசேஷக் களியாட்டுகளுக்கோ, விருந்துக்கோ, சினிமாவுக்கோ போவது போல?' என்று அவள் மனம் துடுக்குத் தனமாகக் கேள்விகள் எழுப்பியதனால் அவள் சிரிக்கவில்லை.

வழியோடு போன மூன்று யுவதிகள் இந்திராவின் பார்வையில் பட்டு; நினைவின் அலைகளைத் தூண்டி விட்டார்கள்.

வசீகரமாக டிரஸ் செய்திருந்தார்கள். அப்படி நாளுக்கு ஒருவிதமாக ஒப்பனை செய்துகொள்ளப் போதுமான ஆடைகள் அவர்களிடம் இருந்தன இருப்பினும் அவர்கள் அடிக்கடி புதுப்புது ஆடைகள் வாங்கி அணிந்து பகட்டித் திரிவதில் ஆர்வம் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பணம் கிடைத்துக் கொண்டுதான் இருந்தது. மூன்றுபேரும் அவர்களைப் போலவே இன்பநாட்டம் கொண்ட இளைஞர்கள் எவர் எவரோடோ எங்கெங்கோ சுற்றித்திரிந் தார்கள். எப்படி எப்படி எல்லாமோ நடந்து கொண்டார்கள்.

அதை அறிந்திருந்த இந்திரா 'இவர்கள் செய்வது மட்டும் என்னவாம்?' என்று நினைத்தாள்.

'சோஷியலாப் பழகுகிறது. ஃபிரீயா பொழுது போக்குவது, கட்டுப்பாடு இல்லாத நட்பு என்று பெயர் ஏதாவது இருக்கும்' என்று அவள் மனம் குரல் கொடுத்தது.

அவளுக்குச் சிரிப்புமேலெழுந்தது. சிரித்தாள். 'ஏய் என்ன இது? வாயை மூடிக்கிட்டு சும்மா இருக்கமாட்டே?' என்று காவலர் அதட்டினார்.

கப்சிப்! அவள் முகம் கடுமை ஏற்றது. அவள் கண்கள் மட்டும் சுதந்திரமாகச் சுற்றித் திரிந்தன.

கார் ஒன்று அவசரம் இல்லாமல் நகர்ந்தது. அதில் ஒரு அம்மாள். செல்வச் செழிப்பின், வளமான வாழ்க்கையின், நிறைவான போஷாக்கின் சின்னமாக, மினுமினுப்போடு விளங்கிய சதை உருவம். அவள் பக்கத்தில் அவளை மகிழ்விக்கும் அன்பன்.

அவளை இந்திரா எத்தனையோ தடவை கவனித்திருக்கிறாள். பெரிய இடம் பணத்துக்குக் குறைவு இல்லை. வாழ்க்கையைப் பற்றிய கவலை எதுவும் கிடையாது. அவள் கணவன் பல வழிகளில் பணம் பண்ணிக்கொண்டிருந்தான். அவள் சந்தோஷமாக அனுபவித்துக் கொண்டிருந்தாள். அவளை மகிழ்விக்கும் அன்பர் அடிக்கடி மாறிக் கொண்டிருந்தார். இப்போது அவளோடு போவது அவள் கணவன் அல்ல, போனவாரம் பார்வையில் பட்ட அன்பனும் இல்லை.

'இதற்குப் பேர் என்னவோ? இது பாராட்டப்பட வேண்டிய செயல்தானா?' என்று கேட்டது இந்திராவின் மனம்.

'அப்படித்தான் இருக்கும். இது சமூகமான, சமூகநல, நாகரிக நட்பு உறவு என்று ஏதாவது சிறப்புப் பெயர் பெற்றிருக்கும்' என்று உள்ளொளி குரல் கொடுத்தது. உடனே சிரிப்பு வந்தது.

அவள் சிரித்தாள்.

'இதென்ன பைத்தியம் மாதிரி, சும்மா இஹிஹி யின்னுக்கிட்டு! இப்போ என்ன வேடிக்கை கண்டுபோட்டே?' என்று சிடுசிடுத்தார் காவலர்.

'இல்லே......வந்து.........வயிற்றுக்கு இல்லாமே, பசிக் கொடுமையினாலே, பிழைக்க வேறு வழி இல்லாததனாலே, சிலபேரு இப்படி ஒரு தொழில் செய்ய நேருது நானும் அப்படித்தான். அது குற்றம்னு சொல்லி, புடிச்சு, தண்டனை கொடுக்கிறீங்க. ஆனா, இதே வேலையை வேறு யார் யாரெல்லமோ, வேறு ஏதோ காரணங்களினால் எல்லாம் செய்துக்கிட்டு, ஜம்னு போறாங்க, வாராங்க. ஆடம்பரமா வாழ்றாங்களே தண்டனைக்கு இலக்காகாத அந்த வேலைத் தனத்துக்கு என்னபேரு இருக்குமோன்னு நினைச்சேன். நினைக்க நினைக்க சிரிப்பா வருது!' என்றாள்.

சிரித்தாள்.

'சீ அதிகப்பிரசங்கி! வாயை மூடு! என்று உறுமினார் காவலர். 

# சந்திப்பு

கவிஞர் ஏகநாதன் எப்பவுமே சொல்லி வந்திருக்கிறார்.

அவருக்கு முதன் முதலில் கவிதை ஒளி காட்டியதே ஒரு பெண்தான்! அவளுடைய காந்த ஒளிக் கண்கள் தான்.

சன்னலின் பின்னே சந்திரோதயம் ஆக விளங்கினாள் அவள். வீட்டு வாசல் படியில் புத்தம் புதிய கொலு பொம்மை போல் அடிக்கடி காட்சி தந்தாள். மின்னல் இடையும் பின்னல் சடையும் நாட்டிய அசைவுகள் காட்ட அவள் தெருவிலே நடந்தாள்.

அப்போதெல்லாம் ஏகநாதன் உள்ளத்தில் உணர்ச்சி அலைகளை எழுப்பின அவளுடைய சுடர்மணிக் கண்கள்.

படித்துவிட்டு வேலை தேடுவதாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்த ஏகநாதனுக்கும் அவருடைய நண்பர்களுக்கும் பார்த்து ரசிக்கவும் பேசி மகிழவும் இனிய பொழுது போக்கு ஆக உதவினாள் அவள்.

மொத்தமாகவும் தனித்தனியாகவும் அவளை தரிசித்து இன்ப மகிழ்ச்சி அடைவதற்காக அவர்கள் காத்திருந்தார்கள். வேலையோடும் வேலை இல்லாமலும், வேளைகெட்ட வேளைகளில் எல்லாம், தனியாகவும், இரண்டு மூன்று பேர்களாகவும் அவர்கள் அந்தத் தெரு வழியாகப் போனார்கள். திரும்பத் திரும்ப நடை பழகினார்கள்.

வெண்ணிலா— அவள் பெயர் அதுதான் என்று அவர்கள் வெகு விரைவிலேயே தெரிந்து கொண்டார்கள்-தன் மீதுதான் அதிக ஆசையும் ஈடுபாடும் கொண்டிருக்கிறாள் என்று

ஒவ்வொருவரும் நம்பினார்கள். ஏகநாதன் அதிகம் நம்பினார்.

ஒரு கவிஞராக வளர வேண்டும் என்ற ஆசை அவருக்கு இருந்தது. எப்பவும் எதையாவது கிறுக்கிக் கவிதை என்று பெயர் பண்ண அவர் முயன்று கொண்டிருந்த காலம் அது.

வெண்ணிலா பற்றியும், அவளது சுட்டும் சுடர்விழிகள் பற்றியும், அவை தனது உள்ளத்தில் மூட்டிவிட்ட தீ பற்றியும் ஏகநாதன் அடுக்கு மொழிகள் தொடுத்து வைத்தார். அந்தக் கவிதையை நண்பர்கள் மத்தியில் அரங்கேற்றம் செய்தார்.

அவர்கள் கைகொட்டி ஆரவாரித்து அமோகமாகப் பாராட்டினார்கள். வெண்ணிலா குடமெடுத்து கோலமயில் போல் வாய்க்காலுக்குப் போகும்போது, அவள் தந்த அழகுக் காட்சியை வர்ணிக்கும் வரிகளை உரக்கப் படித்து மகிழ்ந் தார்கள். அந்திவேளையில் புள்ளிமான் போல் துள்ளி அவள் படிக்கட்டில் ஏறிச் செல்லும் லாவகத்தைப் பாடிக் களித்தார்கள்.

பார்க்கப்படுவதில் பெண் தனி மகிழ்வு பெறுகிறாள். இளைஞர்களின் ரசனைப் பார்வை வெயில் இளம் பெண்ணின் உள்ளத்தில் விசேஷ மலர்ச்சி ஏற்படுத்துகிறது. அதன் வீச்சு அவள் முகத்தில் வசீகர வனப்பு சேர்க்கிறது. அவள் கண் களில் மகிழ்வின் ஒளி சுடரிடுகிறது. இதை வெண்ணிலாவும் பிரதிபலித்தாள். அது ஏகநாதனை பித்தன் ஆக்கியது. அவரை மேலும் மேலும் கவிதைகள் எழுதும்படி செய்தது.

வெண்ணிலா தன்னையே அதிகம் நேசிக்கிறாள் என்று ஏகநாதன் நம்பினார். அவர்தான் கவிதை எழுதுகிறார் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. நண்பர்களின் பேச்சும், 'என்ன கவிஞரே, அகோ கவிஞரே!' என்று அடிக்கடி அழைப்பதும் அதை அவளுக்குப் புரிய வைத்திருந்தன.

அவருக்காக அவளது போதைக்கண்கள் போதைப் பார்வை ஏந்தி நின்றன. அவர் கண்களைத் தொட்டு மின்னல் மொழிகள் பேசின. அவளுடைய பழச்சுளை உதடுகள் இனிய புன்முறுவலை அவருக்கு அவ்வப்போது பரிசளித்தன.

இதை எல்லாம் ஏகநாதன் உணர்ச்சியோடு கவிதைகளில் பதிவு செய்திருக்கிறாரே! உள்ளத்தின் உணர்ச்சிகளை எழுதி வைத்ததோடு அவர் மகிழ்ந்து போனார். அவளிடம் பேசி, தன் அன்பையும் ஆசைப்பெருக்கையும் உணர்ச்சித் துடிப்பையும் அவளிடம் எடுத்துச் சொல்ல வேண்டும் என்று அவர் மனம் குரல் கொடுத்தாலும் அவர் துணியவில்லை.

திடீரென்று வெண்ணிலாவுக்குத் திருமணம் நிச்சயமாயிற்று. உரிய நாளில் அது நிகழ்ந்தது. அவள் புதுப்பெண்ணாகக் காட்டிய கோலம் கவிஞரை படாதபாடு படுத்தியது. ஏக்கக்கவிதைகள் பல எழுதிக் வைத்தார் அவர்.

வெண்ணிலா அந்த ஊரை விட்டுப் போய்விட்டாள். அந்த ஊரே ஒளி மங்கி, களை இழந்து போனதாகத் தோன்றியது ஏகநாதனுக்கு.

விரைவிலேயே அவரும் வெளியூர் போய்விட்டார். எங்கோ ஒரு நகரத்தில் ஏதோ ஒரு அச்சகத்தில் அவருக்கு ஒரு வேலை கிடைத்திருந்தது. நல்ல காலம்.

எழுதப்படாமலிருக்கிற கவிதையே மிக உன்னதமான கவிதை; படைக்கப்படாமலிருக்கிற சிலை அல்லது ஓவியமே மிகச் சிறந்த கலைப்படைப்பு; நிறைவேறாமல் இருந்துவிடுகிற காதலே அமர காவியக்காதல். இந்த நியதிப்படி ஏகநாதன் வெண்ணிலா காதலும் உத்தமமான இலக்கியக் காதலாகும் என்று ஏகநாதன் கருதினார். அப்படியே ஒரு கவிதையும் எழுதிவைத்தார்.

அவருடைய நினைவெல்லாம் வெண்ணிலா; கனவு பூராவும் வெண்ணிலா: அவரது எழுத்துக்களிலும் வெண்ணிலாவே குடியிருந்தாள்.

தன்னைப் பற்றி அவள் எண்ணிக் கொண்டிருப்பாள்; தன்னை அவள் மறந்துவிட முடியாது என்று ஏகநாதன் திடமாக எண்ணினார்.

காலம் அதன் இயல்புப்படி ஓடியது. நான்கு வருடங்கள் போய் மறைந்தன. ஏகநாதன் அவருடைய ஊருக்கு வந்திருந் தார். வெண்ணிலாவும் வந்திருப்பதாக அவர் அறிந்தார்.

கவிஞரின் உள்ளம் கூத்தாடியது. தன்னுள் மகத்தான உணர்வுகளைத் தூண்டி, தன்னை ஒரு கவியாக வளர்த்து விட்ட சுந்தர கனவை இம்முறை நேரில் சந்தித்துப் பேசிவிட வேண்டும் என்று அவர் உறுதி பூண்டார். அவளுடைய அழகுத் திருஉருவத்தை நினைத்து நினைத்து சந்தோஷப் பட்டுக்கொண்டிருந்தார்.

வெண்ணிலா அவர் பார்வையில் பட்டாள்; வாசல் நடை யில் தான் வழக்கம்போல் காட்சி தந்தாள்.

கவிஞருக்கு ஒரு அதிர்ச்சி. குளிர்பூம்புனல் ஓடையில் பூத்தவண்ண மலர் என்றும், இளம் காற்றில் நெளிந்து ஆடும் மென்கொடி என்றும், சன்னலின் பின் நின்ற மின்னல் இளம் கொடி என்றும் அவர் வர்ணித்த பெண்ணாக இல்லை இந்த வெண்ணிலா.

காலம் சில பேரை எப்படி சதைப் பிண்டமாக மாற்றி விடுகிறது என்று எண்ணியது ஏகநாதன் மனம். நாலு வருடங்கள். வசதியான வாழ்க்கை. கவலை இல்லாத, உழைப்பு இல்லாத சுகசீவனம். வெண்ணிலா குதிர் போல வளர்ந்திருந்தாள்.

இருப்பினும் பரவாயில்லே; பேசிவிட வேண்டியது தான்; என்ன வெண்ணிலா, நலம்தானா என்று கேட்டுப் பேச்சை ஆரம்பிக்கலாம் என நினைத்து ஏகநாதன் தெருவில் நடக்க லானார்.

முதலில் தனியாக நின்ற வெண்ணிலா அருகே இன்னொ ருத்தி வந்து சேர்ந்தாள். அவளுடைய உறவுப்பெண்ணாக

இருக்க வேண்டும். வெளியூரிலிருந்து வந்தவளாக இருக்கலாம்.

'யாரு இந்த ஆளு? இதை உனக்குத் தெரியுமா? தெரிஞ்ச ஆளு மாதிரி சிரிச்சுக்கிட்டு உன்னையே முழிச்சுப் பார்த்தபடி போகுதே?' என்றாள் அவள்.

தனித்து நின்றவளிடம் பேசலாம் என எண்ணிய ஏகநாதன், இன்னொருத்தியும் வந்து நிற்கவே, பேச்சு கொடுக்கத் துணியாமல், வழியோடு நடந்தார். வெண்ணிலாவை பார்த்தபடியே தான் போனார்.

பெண்களின் பேச்சு அவர் காதில் தெளிவாக விழுந்தது.

வெண்ணிலா சொன்னாள்—

'இதா! இது சரியான லூசு, கவிதை எழுதுறேன், பாட்டு எழுதுறேன்னு சொல்லி, பொம்பிளைகளைப் பற்றி என்னென்னவோ கிறுக்கி வைக்கும். இது கூடச்சேர்ந்த லூசுகள் அதை சுத்திக்கிட்டுத்திரியும்...'

"நல்ல தமாஷ் தான் போ!" என்று கூறிச் சிரித்தாள் கூட நின்றவள்.

வெண்ணிலாவின் தோற்றம் தந்த அதிர்ச்சியை விடப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது அவள் பேச்சு.

இவளை சந்திக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேனே! இந்தச் சந்திப்பு நிகழாமலே இருந்திருக்கலாம். என் உள்ளத்தின் கனவுகள் சிதையாமலாவது இருக்கும் என்று நினைத்தபடி நடந்தார் ஏகநாதன். காதல் கனலெழுப்பிக் கவிதை தந்திடும் கலைச் சகுந்தலை நிகர் பெண்ணை அவர் திரும்பிப் பார்க்க வேண்டும் என்று எண்ணம் கொள்ளவேயில்லை! 

# முத்துமாலையின் மனமாற்றம்

முத்துமாலை— அவன்தான் 'சிங்கக்குட்டி' என்றும், 'வீர சிங்கம்' என்றும், 'பலே எம்டன்' என்றும் பல பேரால் பேசப்படும் பெருமை பெற்றிருந்த முரடன்— திடீரென்று அப்படி மாறிவிடுவான் என்று யாரும் எதிர்பார்த்திருக்க முடியாது.

ஆனால், 'ஆள் அடியோடு மாறிப்போனான். அது அதிசயமாகப் பேசப்பட்டது எல்லோராலும்.

பின்னே பேசாமல் என்ன செய்வார்கள்? அந்த வட்டாரத்துக்கே அது ஒரு 'அதிசயம், ஆனால் உண்மை' என்கிற ரகவிசேஷம் இல்லையா?

முந்திய தினம் இரவுவரை ஆசாமி 'நன்றாகத்தான்' இருந்தான். அதாவது அவனது கல்யாண குணங்களை எல்லாம் ஒழுங்காகப் பெற்றிருந்தான். திருவிளையாடல்களை திவ்வியமாக நிறைவேற்றினான். மறுநாள் காலையில் அவன் முற்றிலும் மாறிப்போனான் என்றால்!

இதில் ஏதோ கோளாறு புகுந்துவிட்டது என்றே எல்லோரும் கருதினர். அது என்ன கோளாறாக இருக்கும் என்பதில்தான் கருத்து வேற்றுமை. முத்துமாலைக்கு 'ஸ்க்ரு லூஸ் ஆகிவிட்டது!' அவன் ஏதோ லேகியம் தின்றதிலே அவன் மூளையே பாதிக்கப்பட்டு விட்டது! 'பையனை' மோகினி பிடிச்சு இப்படி ஆட்டுது! அவனுக்கு ஞானப் பைத்தியம். ஏதோ மர்மம் இருக்குது'— இப்படி எல்லாம் பேச்சுகள் பிறந்து அடிபட்டன.

காலையில் எழும்போதே முத்துமாலை கலாட்டாவுக்கு ஆயத்தமாகத்தான் எழுந்திருப்பான். மனைவியோடு

சண்டை போடுவான். 'அதுக்கு உப்பு போதாது இது வாய்க்கு நல்லாவேயில்லை!' என்று பதார்த்தங்களை வீசி அடிப்பான். தெருவில் போகிறவர்களை வம்புக்கு இழுப்பான். ஏவராவது முறைத்தால், உதை கொடுப்பான். அவனுக்கும் அவனைப் போன்றவர்களுக்கும் 'கள்ளச்சாராயம்' தினசரி ஒழுங்காகக் கிடைத்து வந்தது. அதைக் குடித்து விட்டுக் கூச்சல் போடுவது, தெருவில் ரகளை பண்ணுவது, முறைப்ப வர்களிடமிருந்து பணம் பறிப்பது, கடைக்காரர்களையும் ஓட்டல்காரர்களையும் மிரட்டுவது, ஆசைநாயகியோடு— ஏசிப் பேசிக் கொஞ்சுவது இவை எல்லாம் அவன் திருவிளை யாடல்களில் சில. அவனும் அவன் சகாக்களும் வம்புகள் வளர்ப்பதிலும், வீண் சண்டைகளை 'விலைக்கு வாங்கு வதிலும்', எடுத்ததற்கெல்லாம் கத்தியை எடுப்பதிலும் சூரர்கள். அவர்கள் அனைவரிலும் சூரப்புலி முத்துமாலை. ஆகவே அவன் 'சிங்கம்!'

போலீஸ் வருகிறது என்றால் இந்தப் புலிகள் எப்படியோ மாயமாய் மறைந்து விடும். சில சமயம் அகப்பட்டுக் கொள்வதும் உண்டு. முத்துமாலையும் ஒன்றிரு தடவைகள் ஜெயிலுக்குப்போய் வந்தவன்தான். அவன் போக்கு மாறவில்லை.

அதனாலேதான், ஒருநாள் ராத்திரி கலாட்டா செய்து விட்டு சிங்கக்குட்டியாய் தூங்கப் போனவன், விடிந்து எழுந்ததும் ஆட்டுக்குட்டியாய் மாறியிருந்ததை அறிய நேர்ந்ததும், அவனை அறிந்தவர்கள் அறியாதவர்கள், நண்பர்கள் எதிரிகள் எல்லோருமே, 'நம்பமுடியாத அதிசயம் இது' என்று வியப்பு அடைந்தார்கள்.

என்ன செய்வது! நம்பத்தான் வேண்டியிருந்தது. 'முரடர் திலகம்' முத்துமாலை சாதுவாக, தீமைகள் புரிய விரும்பாதவனாக அட்டூழியங்கள் செய்ய ஆசைப் படாதவனாகக் காட்சி அளிக்க முன்வந்திருந்தான்.

வழக்கத்துக்கு விரோதமாக, அதிகாலையில் எழுந்தான் 'பச்சத் தண்ணி'யில் குளித்தான். சுத்தமான ஆடை அணிந்து, சாமியைக் கும்பிட்டான். 'அம்மா லச்சுமி, இன்று காலையில் என்ன ஆகாரம்?' என்று அன்பாக மனைவியிடம் விசாரித்தான்.

அவளுக்கே எதையும் நம்ப முடியவில்லை. தூக்கக் கிறக்கமோ, குடி மயக்கமோ, மூளைக் குழப்பமோ என்ற சந்தேகம். எழுகிறபோதே, ஏ சவத்து மூண்டை, ஏ தேவடியா, ஏ அவளே இவளே என்று வாயில் வந்தபடி பேசும் சுபாவம் பெற்றிருந்த பருஷன்காரன்— நாள் பூராவும் குளிக்காமல் கழுதை மாதிரி அலைந்து திரிந்துவிட்டு, சாயங்காலமாக வந்து வெந்நீர் போடும்படி அதிகாரம் பண்ணி, குளிப்பதையே ஒரு பெரிய சடங்காக நடத்தக் கூடியவன்— இன்று அமைதியாகக் குளித்து அருமையாகப் பெயர் சொல்லி அழைத்துக் குழைகிறான் என்றால்?

அவள் விழிகள் அகல, வாய் பிளந்து அவனையே அதிசயமாக பார்த்து நின்றாள்.

'என்னம்மா? வீட்டிலே ஒண்ணும் இல்லையா? அதைச் சொல்லேன்—சரி சரி, நான் ஓட்டலில் பார்த்துக் கொள்கிறேன்' என்று கிளம்பினான்.

இப்படி அமைதியாக அவன் பேசி அவள் கேட்டதே இல்லை. 'இல்லை' என்றால், 'ஏண்டி இல்லே?' என்று கேட்டு, ஆயிரம் 'கெட்ட வார்த்தைகள்' அர்ச்சனை பண்ணி, முதுகில் இரண்டு 'கும்'கள் கொடுத்துவிட்டுத்தான் வெளியேறுவான். அவனுக்கு என்ன வந்துவிட்டது திடீரென்று?

'லச்சுமி. இன்னைக்கு மத்தியானம் ஜோராக சாப்பாடு தயார் பண்ணிவை. உருளைக்கிழங்குப் பொரியல், வெங்காய சாம்பார், அப்பளம் எல்லாம் இருக்கட்டும். இந்தா ரூபாய்

என்று ஐந்து ரூபாய் நோட்டை அவளிடம் கொடுத்துவிட்டு அவன் போனான்.

'கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதிக்கலியே?' என்று சந்தேகத்துடன் வெளியே வந்து பார்த்தாள் அவள். உலகம் வழக்கம்போல்தான் இயங்கிக் கொண்டிருந்தது. முத்துமாலைதான் மாறியிருந்தான். 'என்ன கூத்துக்கோ இது!' என்று எண்ணினாள் அவள்.

முத்துமாலையின் அனுபவ வட்டாரத்தில் எதிர்ப்பட்ட அனைவரும் இப்படித்தான் எண்ணினார்கள்.

ஓட்டலில், மேஜை துடைக்கிற பையன் கை தவறுதலாகத் தண்ணீர் தம்ளரைத் தட்டிவிட்டான். தண்ணீர் முத்துமாலையின் வேஷ்டியை நனைத்துவிட்டது. அங்கிருந்தவர்கள் எல்லோரும் 'பையனுக்கு சனியன் பிடிச்சிருக்கான். இப்ப தொலைஞ்சான்!' என்றே கருதினர். பையன் நடுங்கினான். முத்துமாலையின் கோபம், தன் மூஞ்சியில் அடியாக மலருமா, முதுகில் முத்துகளாகப் பாயுமா, சுடச் சுட ஆவி பறக்கும் சாம்பார் தட்டோடு தன் தலைமீது கொட்டப்படும் செயலாகப் பரிணமிக்குமா என்று குழம்பிய படி, கும்பிட்டு நின்றான். முத்துமாலை தண்ணீரை, தம்ளரை, வேட்டியை, பையனை பரிதாபமாக நோக்கினான். 'ஏன் தம்பி, ஜாக்கிரதையாக வேலை பார்க்க வேணாம்? உம் உம்.துடை சீக்கிரம். ஏன் இப்படி நிற்கிறே?' என்று சாதாரணமாகச் சொன்னான்.

அதிசயத்திலும் அதிசயம் இது. அங்கிருந்தவர்கள் அனைவரும் திகைப்படைந்தார்கள். முத்துமாலைதானா இது! முத்துமாலையா இப்படி நடந்துகொண்டான்? அவர்களுடைய கண்களையும் காதுகளையும் அவர்களாலேயே நம்ப முடியவில்லை.

ஓட்டல் முதலாளிகூட திகைத்துப்போனார். அந்த ஓட்டலிலேயே அல்ப காரணங்களுக்காக எவ்வளவு பெரிய

கலாட்டா எல்லாம் பண்ணியிருக்கிறான் இந்த 'சிங்கக்குட்டி!' இப்போது? 'ஹிஹி, பையன் ஏதோ தெரியாத்தனமாக...?' என்று 'ஞஞ்ஞ மிஞ்ஞ' பண்ணி "ஐஸ் வைக்க' முன் வந்தார் அவர்.

முத்துமாலை சிரித்தான் 'அவனும் மனுசப் பிறவிதானே. மிஷின் இல்லையே! கை தவறுவது சகஜம். மனுசன் என்றால் தப்பு செய்யாமல் இருக்க முடியாது. இந்த சின்னத் தப்பை எல்லாம் பெரிசுபடுத்துவது என்றால், அதிலே மனுசத்தன்மை என்ன இருக்கும்?' என்றான்.

முரட்டு முத்துமாலையா இப்படி பேசுகிறான்? ஆச்சர்யப்படாதவர் யாருமே இல்லை அங்கு.

அன்று அவன் இந்தவிதமாக ஊர் பூராவையும் ஆச்சரியத்தில் பிடித்துத் தள்ளிக்கொண்டிருந்தான், தனது சொல்களினாலும் செயல்கள் மூலமும்.

அன்று மத்தியானம் அவன் வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விட்டு, லட்சுமியின் சமையலை பாராட்டிப் பேசி, அவளை யும் சாப்பிடும்படி உபசரித்துவிட்டு ஒய்வாகப் படுத்தான். இதுதான் சமயம் என்று அவள் அவனிடம் மெதுவாகப் பேச்சு கொடுத்தாள்.' என்ன நீங்க ஒரு மாதிரி இருக்கீங்களே இன்னைக்கு?' என்று ஆரம்பித்தாள்.

முத்துமாலை வேசாகச் சிரித்தான். 'என்ன ஒரு மாதிரி!' என்றான். பிறகு சொன்னான்: 'நான் தினசரி நடந்து வந்திருக்கிற விதம் ஒழுங்கானதில்லை. அது எனக்கே தெரியும். ஐயா ஞானப்பிரகாசமும் அடிக்கடி சொல்வாரு'

'யாரு அந்த ஐயா?' என்று கேட்டாள் மனைவி.

'நல்ல அறிவாளி.' ரொம்ப நல்ல மனுஷன். யாருக்கும் கேடு நினைக்கமாட்டார். பரோபகாரி. படிக்கிறதும், நல்ல விஷயங்களைப் பற்றி நினைக்கிறதும் பேசறதும்.... அவர் குணத்தை மெச்சாதவங்க கிடையாது.'

'சரி சரி. அவரு என்ன சொன்னாரு?'

'எவ்வளவோ சொல்லியிருக்காரு. மனித வாழ்க்கை உயர்ந்தது. மனிதன் உயர்வானவன். ஒவ்வொருவரும் இதை நிலைநிறுத்தப் பாடுபடணும். நல்லது செய்ய முடியா விட்டாலும் தீங்கு செய்யப்படாது என்றெல்லாம் சொல்வாரு.'

'அவரு சாமியாரு போலிருக்கு!'

'சாமியாரு இல்லை. நல்ல மனுஷன். அதுதான் சொல்றேனே, அறிவாளி. அவரு சொல்வாரு—ஏழுத்து மாலை; ஏன் இப்படி எல்லாம் நடந்து கொள்றே? நல்ல வனாக நடக்கணும். குடிக்கக்கூடாது. கலாட்டா பண்ணப் படாது என்றெல்லாம் சொல்வாரு. சொல்ற போது, அவரு சொல்வது நியாயமான பேச்சு அப்படியே நடந்து கொள்ள வேண்டியது தான் என்று எனக்கும் படும். ஆனால் பழக்க தோஷம். என் போக்கில் தான் நடப்பேன். நேற்று அந்த ஐயா என்னை விடாப்பிடியாக, வாக்குறுதி செய்யும்படி வச்சிட்டாரு. பேச்சுவாக்கிலே நான் சொன்னேன், இன்னிக் குத்தான் என் பிறந்த நாள்னு. அவ்வளவு தான், அவர் தன் பேச்சை ஆரம்பிச்சிட்டாரு. இன்று நாள் புதிது; நாம் புதியவர்; இன்று புதுசாகப் பிறந்தோம் என்று நம்பு, நல்லவனாக மாறி, நல்ல காரியங்களையே செய்வேன்னு தீர்மானம் பண்ணிக்கொள். யார் சண்டைக்கு வந்தாலும் நீ எதிர்த்து சண்டைபோடாதே வாயில் வந்தபடி ஏசாதே. ஒருவன் உன் ஒரு கன்னத்தில் அடித்தால்; நீ மற்றொரு கன்னத்தையும் திருப்பிக்காட்டு. இப்படி நிறையச் சொன்னாறா அவரு பேசப்பேச என் மனமும் மாற ஆரம் பிச்சிட்டுது. ராத்திரி ரொம்ப நேரம் யோசித்தேன். என் போக்கை அடியோடு மாற்றிக் கொள்ளணும்னு என் அந்த ராத்மா வழிகாட்டியது. இப்படி நடப்பதுதான் நல்லதாகவும் படுது!'

முத்துமாலையின் பிரசங்கம் போன்ற பேச்சைக் கேட்டு அவன் மனைவி பெருமூச்செறிந்தாள். 'சாமி, பிள்ளை யாரப்பா, நீ தான் காப்பாத்தனும்' என்று மனசுக்குள் வேண்டிக்கொண்டாள்.

முத்துமாலை தனது எண்ணங்களை, கூட்டியும் குறைத்தும், எங்கும் எப்போதும் ஒலிபரப்பத் தொடங்கினான். குடிப்பது தவறு என்றான், இப்படி, அவனது சகாக்களுக்கெல்லாம் விசித்திரமாக தொனித்த கருத்துக்களை அவன் அள்ளிச் சிதறினான்.

சண்டியன் சிங்காரவேலு என்று ஒருவன். இவனுக்கு முத்துமாலையைப் பிடிக்காது. அவனிடம் அநேக தடவைகள் இவன் சரியானபடி உதை வாங்கியிருக்கிறான். இப்போது அவனிடம் கொஞ்சம் வாலாட்டலாமே என்று நினைத்தான். 'இப்ப ஒரு தமாஷ் பண்ணுகிறேன், பாருங்க!' என்று மற்றவர்களிடம் சொல்லிவிட்டு முத்துமாலையிடம் வந்தான். 'நீ சொல்வது உண்மை தான்னு எப்படி நம்புவது? சோதிச்சுப் பார்க்கலாமா?' என்றான்.

'ஓ! போஷாக!' என்றான் முத்துமாலை.

அடுத்ததை அவன் எதிர்பார்க்கவில்லை. சிங்காரம் அவன் வலது கன்னத்தில் ஓங்கி ஒரு அறை கொடுத்தான் 'ஹெ, இப்ப உம்ம இடது கன்னத்தையும் காட்டுவீரோ!' என்றான், கிண்டலாக.

முத்துமாலை அமைதியாக மறு கன்னத்தை காட்டினான். அப்படிக் காட்டினால் எதிரி அடிக்கத் துணிய மாட்டான் என்று ஞானப்பிரகாசம் சொல்லியிருந்தார். ஆனால், சிங்காரம் என்ன செய்தான்? நாணமோ, குற்ற உணர்வோ பெறாது, அந்தக் கன்னத்திலும் பளாரென ஒன்று கொடுத்தான்.

முத்துமாலைக்கு விண்விண் என்று தெறித்தது. இருந்தாலும், அமைதியாக அவ்விடம் விட்டு நகர்ந்தான். பலபேர் சிரிப்பதும், சண்டியனைப் புகழ்ந்து பேசுவதும் அவன் காதுகளில் விழத்தான் செய்தன. ஒருவன் 'ஏ பெட்டை!' என்று கூவினான்.

நேற்று இந்தத் துணிச்சல் சிங்காரம் பயலுக்கோ மற்றவர்களுக்கோ வந்திருக்குமா? முத்துமாலையின் உள்ளம் கொதித்தது. 'அமைதி!' என்றது மனசின் ஒரு குரல்.

இப்படி அவன் தனக்குத் தானே உபதேசித்துக் கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்கள் பிறகு நிறையவே வந்தன. முன்பு அவனிடம் உதை வாங்கியவர்கள், ஏச்சு கேட்டவர்கள் பலரும், முத்துமாலை அடிபட்டாலும் திருப்பி அடிக்காத சாதுவாகி விட்டான் என்று தெரிந்ததும் துணிந்துவிட்டார்கள். முதுகில் குத்தி விட்டு, அடுத்த குத்தை எங்கே கொடுப்பது என்று ஒருவன் கேட்டான். ஒரு சோனிப்பயல் அவன் மேலே வெற்றிலை எச்சிலைத் துப்பி விட்டு, 'ஸாரி பிரதர். மன்னிக்கணும்' என்றான். ஒருவன் என்ன, அநேகம் பேர் செருப்புக் காலால் அவன் காலை மிதித்து நசுக்கினர். அவன் முன்னே வந்து நின்று, குடித்துக் கொண்டே, 'நீரும் ஒரு கிளாஸ் போடுமேன்!' என்றார்கள் சிலர். அவனுக்குக் கடன் கொடுத்திருந்த சிலபேர் முன்பு அவனிடம் வாய்திறந்து கேட்கவே அஞ்சியிருந்தவர்கள் இப்போது சூடாகப் பேசினர். 'வாங்கிச் செலவு செய்யத் தெரிந்ததே? வாங்கிய பணத்தைக்கொடுக்க வேண்டாம்? மானம் வெட்கம் இருந்தால் இப்படிச் செய்வியா? நீ சோறு திங்கியா, வேறு என்னத்தையும் திங்கியா?' என்று கேட்டு விட்டான் ஒருவன். தன் துணிச்சலைத் தானே மெச்சி மகிழ்ந்தும் போனான்.

இவ்வாறு ஐந்து தினங்கள் கழிந்தன. முத்துமாலைக்கு அவமானகரமான, துக்ககரமான நாட்கள் அவை. ஐந்தாவது நாள் இரவு. அவன் சரியாகத் தூங்கவில்லை. உருண்டு புரண்டு முனங்கிக்கொண்டிருந்தான்.

'உங்களுக்குத் தூக்கம் வரலேன்னு சொன்னால் பேசாமல் கிடங்களேன். மத்தவங்க தூக்கத்தை ஏன் கெடுக்கணும்?' என்று மனைவி எரிந்து விழுந்தாள்

ஐயா ஞானப்பிரகாசம்! உமக்கு ஒரு கும்பிடு. உம்ம கொள்கைக்கு ஒரு கும்பிடு! நீரே நல்லவராக இரியும். அது போதும். நமக்கு அது கட்டுபடியாகாத பாலிசி என்பது நல்லாப் புரிஞ்சிட்டுது; அப்போ நம்ம பெண்டாட்டிகூட நம்மை மதிப்பது இல்லை. தெரிஞ்சுக்கிடும். கொட்டினால் தான் தேளு, கொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சி என்பாங்க, அது கரெக்ட். தேளு கொட்டமாட்டேன்னு விரதம் எடுத்துக் கிட்டுத் திரிஞ்சா அதைக் கண்டு ஜனங்க பயப்படமாட்டாங்க. பணம், பதவி, அதிகாரம், அடாவடி, உடல்வலு, வெறி, கத்தி வகையறா— இதுகளுக்கு நம்மளவங்க பயந்து நடுங்கி, பக்தி செய்து பழகிப்போயிட்டாங்க. இதுகளில் எதுவும் இல்லாத வங்களை யாரும் மதிக்கிறது இல்லே. ஆமா, எனக்கு நல்லாத் தெரிஞ்சு போச்சு!

முத்துமாலையின் மனம் இவ்வாறு பேசியது.

மறுநாள் காலையில் அந்த வீடு அமர்க்களப்பட்டது. 'ஏய் புழுக்கமுண்டை! இத்தனை நேரம் என்னடி செஞ்சுக்கிட் கிட்டிருந்தே? காப்பி எங்கே?' என்று உறுமினான் அவன். அவள் என்னவோ சொல்ல வாய் திறக்கவும் அந்த வாய் மீதே ஓங்கி அறைந்தான். இனி மேல் ஐயா பழைய முத்துமாலை தான். இடையிலே அஞ்சு நாள் என் மனம் புதுசா மாறி யிருந்தது. இப்ப திரும்பவும் பழைய நிலைக்கே மாறி வந்துட்டுது. ஆமா, புத்தியாப் பிழை!' என்று கத்தினான்.

மறைத்து வைத்திருந்த கள்ளச் சாராயத்தைக் குடித் தான். 'இந்த அஞ்சு நாளும் ஐயாகிட்டே வாலாட்டின பொடிப் பசங்களுக்கெல்லாம் வட்டியும் முதலுமாக கொடுக்கப்போறேன் இன்னிக்கு. முதல்லே அந்த சிங்காரம் பயலை பெண்ட் எடுத்துக்கிட்டு வாறேன்' என்று மிடுக்காகக் கிளம்பினான் முத்துமாலை.

அவன் போவதை பெருமையோடும் மகிழ்ச்சியோடும் பாத்துக்கொண்டு நின்றாள் அவன் மனைவி.

'டாய் அடேய், யாருடாது? ஐயா சிங்கக் குட்டிடா' வாங்கடா பயல்களா என் முன்னாலே!' என்று அவன் குரல் வழக்கமான இடங்களில் எல்லாம் முழக்கமிட்டது.

'ஏஏ, முத்துமாலை பழையபடி போக்கிரி ஆயிட்டான்' என்ற பேச்சும் பயமும் தெருவுக்குத் தெரு வேகமாகப் பரவலாயின. அவன் அட்டகாசங்கள் அதிக வேகத்தோடு, வலுவோடு தலைவிரித்தாடின.

அந்தப் பக்கமா வரநேர்ந்த ஞானப்பிரகாசம், 'என்ன முத்துமாலை இது?' என்று கேட்டார்.

'என் மனம் தானாகவே மாறி விட்டது, எல்லாத்துக்கும் மனம்தானே காரணம்! உங்க அந்தராத்மா உங்களுக்கு ஏற்ற நல்ல வழியைக் காட்டுது. என் அந்தராத்மா, காலத்துக்குத் தகுந்த, சூழ்நிலைக்கு ஏற்ற, எனக்கு நல்லதான் வழியை எனக்குக் காட்டுது. அவங்க அவங்க வழி அவங்க அவங்களுக்கு!' என்று சொல்லி, பெரிசாகக் கும்பிட்டு வைத்தான் முத்துமாலை. □

# கொடுக்கல் வாங்கல்

காந்திமதிநாதனுக்கு வாழ்க்கையில் உயர்வடைய வேண்டும் என்ற ஆசை இருந்தது. 'எப்படியாவது உயர்ந்து, நல்ல அந்தஸ்தை அடையவேண்டும்' என்று எண்ணினான் அவன். சதா அதைப் பற்றியே கனவு கண்டு வந்தான்.

வாழ்க்கையில் உயர்வதற்கு வேண்டிய சந்தர்ப்பங்களும் வசதிகளும் எல்லோருக்கும் கிடைத்து விடுகின்றனவா என்ன? 'சந்தர்ப்பங்களுக்காகக் காத்திருப்பது தப்பு. நம்மைத் தேடி அவை வருவதில்லை. நமக்கு வேண்டிய வாய்ப்புகளை நாமேதான் தேடிக்கொள்ள வேண்டும்' என்று அனுபவசாலி கள் சொல்கிறார்கள். உண்மை. ஆனாலும், அதற்குக்கூட ஓரளவு வசதியாவது இருக்க வேண்டுமே. பணம் என்கிற மூலாதாரத்தின் மேல் தானே மற்ற எதையும் அமைக்க முடியும்?

காந்திமதிநாதனோ, 'கையிலொரு காசுமில்லை; கடன் கொடுப்பார் யாருமில்லை!' என்று பாட்டுப்பாட வேண்டிய நிலைமையில் இருந்தான். அவன் தனக்குத் தேவையான சந்தர்ப்பங்களை சிருஷ்டித்துக் கொள்வது எப்படி?

'யாராவது ஒரு ஆயிரம் ரூபாய் கொடுத்து உதவினால்?'— இதுவே அவனுடைய எண்ணமும் ஏக்கமுமாக அமைந்தது. ஆனால் யார் அவ்வளவு பணம் கொடுப்பார்கள்? 'போண்டிப் பயலான' அவனை நம்பிக் கடன் கொடுக்கவா செல்வர்கள் பணம் சேர்த்து வைத்திருந்தார்கள்? இல்லையே!

அவனும் யாராரிடமெல்லாமோ கேட்டுப் பார்த்தான். உறவினர்களிடமும், சமூகப் பெரியார்களிடமும் கேட்டான், கடனாகத்தான். 'என்னை நம்புங்கள். எப்படியும் நான்

பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன். நான் சாகிறதுக் குள்ளே, என் உடம்புத் தோலைச் செருப்பாகத் தைத்துப் போட்டாவது எனது நன்றியைக் காட்டுவேன். தயவுசெய்து உதவி புரியுங்கள்' என்று கெஞ்சினான்.

அவர்கள் சிரித்தார்கள். பணத்தின் மிடுக்கான தொனி அது.

'ஹெ ஹங்! ஏய், செருப்பு வேணுமானால் கடையிலே ரகம் ரகமாகக் கிடைக்கும் டேய். ஆனால், ஆயிரம்ரூபாய்... அது பெரிய விஷயம் அப்பா! கையை விட்டுப்போனால், கிளம்பி வருவது லேசான காரியமல்ல. உனக்குக் கொடுத்தால் அதை நீ எப்படித் திருப்பித்தர முடியும்? உன்னிடம் வீடா வாசலா, நிலமா நீச்சா?— எப்படியும் பற்றிக் கொள்ளலாம் என்று எண்ண? பேசாமல் எங்காவது வெங்காயக் கிட்டங்கி யிலே, மளிகைக் கடையிலே, அரிசி மண்டியிலே, ஜவுளிக் கடையிலே ஏதாவது வேலை பார்த்துப் பிழை, போ! பணத்தோடு தான் பணம் சேரும். நீ ஆயிரம் ரூபாய் கடன் வாங்கி, ஏதேனும் முயற்சி செய்தால் கூட, அந்த ஆயிரமும் உன்னை விட்டுப் போய்விடும். போய் என்ன செய்யும் தெரியுமா? தொண்ணூற்றொன்பதாயிரம் ரூபாய் வச்சிருப் பானே, அவனை லட்சத்துக்கு அதிபதியாக மாற்றிப்போடும். புரியுதா? ஒழுங்காகப் பிழை தம்பி. உனக்கு ஏன் வீண் ஆசை எல்லாம்?— இவ்வாறு தெளிவாக எடுத்துரைத்தார்கள் சில பெரிய மனிதர்கள்.

காந்திமதிநாதன் யோசித்தான்:

'சமூகத்தில் என்னைப்போல் இருப்பவர்கள் ரொம்பப் பேர். திறமை, உழைப்புச் சக்தி, உழைத்து உயர வேண்டும் என்கிற ஆசை எல்லாம் இருந்தும் பாழாகப் போக வேண்டிய நிலைமை. காரணம் என்ன? பணம் இல்லை... நான் பணக்காரனாக வேண்டுமானால்— சீமான் எவனாவது தத்து புத்திரனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். அல்லது, பணக்கார

விதவை எவளாவது ஆசை நாயகனாக என்னை அங்கீகரிக்க வேண்டும். அல்லது பணப் படைத்தவனின் ஒற்றைத் தனிமகளின் கணவனாக மாறவேண்டும். அல்லது, புதையல் கிடைக்க வேண்டும். அல்லது. லாட்டரிப் பரிசு போன்ற அதிர்ஷ்டம் எதிர்ப்பட வேண்டும். இதில் எதுவும் எனக்கு கிட்டாது என்று நிச்சயமாகத் தெரிகிறது. இனி நான் என்ன செய்வது?'

யோசித்து யோசித்து மூளையைக் குழப்பிய காந்திமதி நாதனுக்குத் தெளிவு பிறந்தது. 'மனிதர்களிடம் கடன்பெற முடியவில்லை. கடவுளிடம் கடன்வாங்க வேண்டியதுதான்!' என்ற எண்ணமே அது.

இந்த நினைப்பு எழவும் அவனுக்கே சிரிப்பு பொங்கியது அவன் ரொம்ப நல்லவன். அதனால்தான் கடன் வாங்க விரும்பினான், கொள்ளை அடிக்க ஆசைப்படவில்லை.

அவ்வூர் சிவன் கோவில் 'ரொம்பச் செயலான கோயில்', ஏகப்பட்ட நிலம், நகைகள், தங்கம்— வெள்ளிப் பாத்திரங் கள், சாமான்கள் எல்லாம் உண்டு. உண்டியில் குடங்களின் மூலம் சேருகிற பணமும் நிறையவே வரும்.

நல்லவனான காந்திமதிநாதன் நகைகளையோ பாத்திரங் களையோ தொட விரும்பவில்லை. உண்டியல் குடத்திலிருந்து ஒரு ஆயிரம் ரூபாய் கடனாக எடுத்துக் கொள்ளவே துணிந்தான்.

வருஷத்துக்கு ஒரு முறைதான் பெரிய திருவிழாவுக்குப் பிறகு— உண்டியல் குடங்களைத் திறந்து, பணத்தை எண்ணி கணக்கில் சேர்ப்பது அக்கோயில் வழக்கம். அந்த ஆண்டில் உண்டியலைத் திறக்கும்நாள் இன்னும் வரவில்லை. ஆகையால் தனக்குத் தேவையான பணம் அதில் இருக்கும் என்று அவன் நிச்சயமாக நம்பினான்.

அவன் ஏமாறவில்லை, இரவில் சரியான சமயம் பார்த்து, கோயிலுக்குள் புகுந்து, உண்டியலை உடைத்துத் திறந்து, பணத்தைக் கீழே கொட்டினான். சிறு விளக்கின் உதவியோடு எண்ணினான். வெள்ளி நாணயங்களும்,சில்லறைக் காசுகளும் நிறைந்திருந்தன. ஐந்து ரூபாய், பத்து ரூபாய் நோட்டுகளும் அபூர்வமாகக் கிடந்தன.

காந்திமதிநாதன் அவற்றிலே பொறுக்கிச் சேர்த்து, ஆயிரம் ரூபாய் கணக்காக எடுத்துக் கொண்டான். பாக்கிச் சில்லறைக் காசுகளைக் குடத்தினுள் அள்ளிப்போட்டு, இருந்த இடத்திலேயே வைத்து விட்டான். சன்னிதியில் நின்று, கைகுவித்துத் தலைவணங்கிப் பிரார்த்தித்தான்.

'உமை யொருபாகம் சாமி அவர்களே, வேறுவழி இல்லை. அதனால்தான் இப்படிச் செய்கிறேன் என்பது உங்களுக்கே தெரியும். என்னை நீங்கள் நம்பலாம். இது கடன் தான். எத்தனை வருஷங்கள் போனாலும் சரி; முதலும் வட்டியும் சேர்த்து உங்களுக்குத் திருப்பித் தந்து விடுவேன்' என்று உறுதி கூறினான். பிறகு, 'ஆண்டவனே, நீர்தான் எனக்குத் துணை' என்று பக்தியோடு கும்பிட்டுவிட்டு வெளியேறினான்.

அந்த ஊரை விட்டே வெளியேறினான் அவன். அப்போது காந்திமதி நாதனுக்கு வயது இருபத்து இரண்டு தான்.

முப்பது வருஷங்களுக்குப் பிறகு, மகாராஜ ராஜ ஸ்ரீ. காந்திமதிநாத பிள்ளை அவர்கள் ஊருக்குத் திரும்பி வந்தார்கள். உடம்பிலே சதை கனத்திருந்தது; வயிற்றில் தொந்தி போட்டிருந்தது. கைகளில் மோதிரங்கள் டாலடித்தன. காதுகளில் வைரக் கடுக்கன்கள் மின்னின. உச்சியில் கொஞ்சம் குடுமியும், முகத்தில் பெரிய மீசையும் அவருக்கு அழகு தந்தன. அழகான மனைவி ஒருத்தி உடன்

வந்திருந்தாள். அவருடைய தோற்றமும், அவள் மீது 'பழுத்துத் தொங்கிய' நகைகளும் அவர்கள் பணக்காரர்கள்—பெரும் பணக்காரர்கள் —என்று விளம்பரப்படுத்தின.

உறவு கொண்டாடவும், சுக சௌகரியங்கள் பற்றி விசாரிக்கவும், உண்மையை ஆராயவும் ஊரார்கள் வந்தார்கள் பிள்ளை அவர்களும் உயர்வு தாழ்வு பாராமல் எல்லோரிடமும் தாராளமாகப் பேசிப் பழகினார்.

'இந்த ஊரிலேயே இருந்தால் பிரயோசனமில்லை என்று எனக்கு நிச்சயமாகப் பட்டது. அதனாலே பட்டணத்துக்குப் போகலாமின்னு கிளம்பினேன் ரெயிலிலே ஒருவர் துணை எனக்குக் கிடைத்தது. அவர் கொழும்புக்குப் போவதாகச் சொன்னார். அங்கே அவருக்குப் பெரிய கடை இருப்ப தாகவும், உதவிக்கு ஆள் தேவை என்றும் சொன்னார். நான் வருவதாக ஒப்புக்கொண்டேன். அவர் கடையிலேயே கொஞ்ச நாள் இருந்தேன். நம்ம பக்கத்துக்காரர் உமையொரு பாகம் பிள்ளை என்று ஒருவர் தயவு எனக்குக் கிடைத்தது. அவர் பண உதவி செய்தார். அதனாலே நான் சொந்த வியாபாரம் ஆரம்பித்து விட்டேன். பெரிய யுத்தம் வந்ததா? அப்போ வியாபாரம் நல்ல பிடி பிடிச்சுது. இரண்டாவது யுத்தமும் கைகொடுத்தது, சரி: சம்பாதிச்சது போதும்; நமக்கோ வயசாச்சு; நம்ம ஊரிலேயே போய் வீட்டோடு வாசலோடு இருக்கலாம்னு நினைத்தேன். வந்துவிட்டேன்' என்றார் அவர்.

கோயில் நிலைமை, ஊர் நிலைமை பற்றி எல்லாம் அவர் விசாரித்தார். 'சுவாமிக்கு விசேஷமாக ஒரு பூஜை நடத்த ஆசை' என்று சொல்லி, ஏற்பாடுகள் செய்தார். அன்று உண்டியலில் பெருந்தொகை செலுத்தினார் பிள்ளை. நூறு ரூபாய் நோட்டுகள் பல இருந்ததாக மற்றவர்கள் பேசிக் கொண்டார்கள்.

காந்திமதிநாத பிள்ளைக்குத் தான் அவர் செலுத்திய தொகையின் கணக்கு தெரியும். 'கடன் வாங்கியது ரூபாய் ஆயிரம். அதற்கு வட்டி இவ்வளவு' என்று கணக்கிட்டிருந்தார் அவர்.

பிள்ளை சொந்த வியாபாரம் தொடங்கியபோது பேரேட்டில் பொறித்த முதல்வரி 'ஸ்ரீ உமையொரு பாகர் மூலம் வரவு ரூ 1000' என்பது தான். இப்போது ஸ்ரீ உமையொரு பாகர் அவர்களுக்குக் கடன் முதலும் வட்டியுமாகத் திருப்பிக் கொடுத்த வகையில் ரூ.........' என்று கணக்கு முடிக்கவும் அவர் தவறவில்லை.

காந்திமதிநாத பிள்ளை இவ்வளவு தூரம் 'கணக்கு—கண்டிப்பு—கறார்' என்று இருந்த போதிலும், நல்ல மனிதர் தான் என நிரூபிக்கவும் தவறினார் இல்லை. அந்த ஊரில் பெரிய பள்ளிக்கூடம் ஒன்று நிறுவினார். படிப்புச் செலவுக்குப் பணம் இல்லாமல் கஷ்டப்பட்டவர்களுக்கு இலவசக் கல்வி கிடைக்க வசதி செய்தார். வேலை இல்லாமல் திண்டாடியவர்களுக்கு வாய்ப்புகள் அளிப்பதற்காக, அங்கு தொழிற்சாலை ஒன்றும் அமைத்தார்.

ஏழை எளியவர்களுக்குத் தாராளமாக உதவி புரிந்த அவர் ஸ்ரீ உமையொரு பாகரை மறந்துவிடவில்லை. பெரிய திருவிழாவில் ஒரு நாள் செலவை ஆண்டுதோறும் ஏற்றுக் கொள்ள இசைந்தார் அவர்.

'புண்ணியமூர்த்தி! தயாநிதி!' என்று எல்லோரும் அவரை வாழ்த்தினார்கள். அவர் புகழ் எங்கும் பரவியது.

'பணம் சேர்ந்தால் எல்லாம் தானாக வந்து சேரும். பணக்காரர்கள் எனக்கு உதவவில்லை இன்று உறவு கொண்டாடுகிறார்கள். ஆனால் அன்றும் இன்றும் ஒரே

நிலையில் பார்த்தும் பாராததுபோல, வாய்திறவாமலே இருப்பவர் ஒருவர்தான். அவர்தான் ஸ்ரீ உமையொரு பாகம் சுவாமிகள் என்று அவர் அடிக்கடி நினைப்பது வழக்கம். இந்த எண்ணம் எழுகிறபோதெல்லாம், காந்திமதிநாதருக்குச் சிரிப்பாணி பொங்கி வருவதும் இயல்பாகி விட்டது.

'அவருக்கென்ன! கவலையா, வருத்தமா? பணக்கஷ்டம் இருக்கப் போகிறதா? பயம், துன்பம் என்ற தொல்லை ஏதாவது வரப்போகுதா? ரொம்ப நல்ல மனிதர். ஆண்டவன் அருள் இருக்கிறது. சந்தோஷமாக வாழ்கிறார்!' என்று ஊரார்கள் பேசிக் கொள்வதும் சகஜமாகி விட்டது.



# விழிப்பு

சோமுவுக்கு பக்தி முற்றியிருந்தது.

சோமுவின் பக்தி, எங்கோ இருந்து உலகத்தை ஆட்டு விப்பதாகச் சொல்லப்படுகிற கடவுள் மீது நம்பிக்கை கொள்ளும்படி அவனைத் தூண்டியதைவிட அதிகமாக, சுகானந்த அடிகளிடம் எல்லையில்லா நம்பிக்கை வைக்கும் படி செய்து வந்தது.

அவனைப் பொறுத்தவரையில் சுகானந்த அடிகளே கண்கண்ட தெய்வம். அவரை அவன் உள்ளத்தால் வழி பட்டான். சுவரில் அவர் படத்தை மாட்டி வைத்து, தினந் தோறும் பூமாலை சாத்தி, வணங்கினான். அவர் எழுதிய நூல்கள் பலவற்றையும் பக்தி சிரத்தையோடு மீண்டும் மீண்டும் படித்தான். அவனுக்கு அவைதான் கீதை, உபநிஷத் எல்லாம்.

'அடிகள் எவ்வளவு அற்புதமாக உயர்ந்த தத்துவங்களை எளிய முறையில் விளக்குகிறார், தெரியுமா? நமது சித்தர் களும் பிறரும் சாதாரண மக்களுக்குப் புரியாத பாஷையில் எவ்வளவோ சொல்லி வைத்திருக்கிறார்கள். அவற்றால் என்ன பிரயோசனம்? சுகானந்த அடிகள் கற்றாருக்கும் கல்லாதாருக்கும் ரொம்ப அழகாகப் புரியும்படியாக எழுதி யிருக்கிறார். பிரசங்கம் புரிகிறார்.' என்று சோமு அடிக்கடி வியந்து போவான்.

அடிகள் புதிதாக எதையும் சொல்லிவிடவில்லை. முன்வந்தவர்கள் காலம் காலமாகச் சொல்லி வந்ததைத்

க—8

தான் அவரும் கூறுகிறார். காமம், கோபம், பொறாமை, மண்ணாசை, பொன்னாசை, முதலியவைகளை துறந்து விட்டால்தான் மனிதன் ஆன்மீக உயர்வு பெறமுடியும் என்றுதானே இவரும் சொல்கிறார்?—இப்படி யாராவது பேசிவிட்டால் சோமுவுக்குக் கோபம் வந்துவிடும். 'மடையர்கள்! மகானின் மதிப்பு இவர்களுக்கு எங்கே தெரியும்!' என்று முணுமுணுப்பான். அவர்களிடம் பேசிப் பயன் இல்லை என்று விலகிவிடுவான்.

சுகானந்த அடிகள் சொற்பொழிவு எங்காவது நடை பெறுகிறதா என்று தேடிப்போய் அதைக் கேட்டு தன் காதுகளைப் புனிதப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று விரைவான்.

இதற்காக அவன் அலைச்சலையோ, பணச்செலவையோ, கால விரயத்தையோ பெரிது படுத்துவது கிடையாது.

சோமுவை அறிந்தவர்கள் அவனை 'வெள்ளை வேட்டித் தம்பிரான்' என்று கேலியாகக் குறிப்பிட்டு வந்தார்கள். 'சுகானந்த அடிமை' என்று கிண்டல் செய்தார்கள். அதை எல்லாம் அவன் காதில் போட்டுக் கொள்ளுவதே இல்லை.

சுகானந்த அடிகளின் பொன்மொழிகளைத் தன்னால் இயன்ற அளவுக்குப் பரப்ப வேண்டும் என்று அவன் ஆசைப் பட்டான். அவருடைய புத்தகங்களை விற்பனை செய்வதன் மூலம் இந்தத் திருப்பணியை அருமையாகச் செய்ய முடியுமே! எனவே, அவன் புத்தக வியாபாரத்தில் ஈடுபட் டான்.

அடிகளின் நூல்கள் அடிகள் விலாசத்தில்தான் கிடைக்கும் என்று அவன் தெரிய நேர்ந்தது. அவரே தனக்கெனத் தனி அச்சகம் நிறுவி, தனிப்பதிப்பகம் நடத்து கிறார் என்றும் அவன் அறிய முடிந்தது.

விஷயங்களின் மதிப்பறிந்து புத்தகம் போடுவோர் கிடைக்காத காலம் இல்லையா இது? அதனால் தனது எண்ணங்களையும் எழுத்துக்களையும் அடிகளே புத்தகமாக்குவதற்கும், அவற்றை நன்கு பரப்புவதற்கும் நல்ல ஏற்பாடு செய்திருக்கிறார். போற்ற வேண்டிய காரியம்' என்று சோமு எண்ணினான்.

அவன் எண்ணத்தைக் கேள்வியுற்ற நண்பன் ஒருவன் சிரித்தான். 'இதர நூல் வெளியீட்டாளர்களிடம் கொடுத்தால் பணம் சரியாக வராது; நிறையவும் கிடைக்காது. அவருக்கு ஒரு மார்க்கெட் உண்டு என்பது நிச்சயம். அதனால் அவர் நூல்களை அவரே வெளியிட்டு விற்பனை செய்வதன் மூலம் நல்ல லாபம் கிடைக்கும். அவ்வளவு லாபமும் அவருக்கே கிட்டும். இதுதான் அவருடைய நோக்கம். சுகானந்தர் பக்கா பிசினஸ்மேன்' என்று சொன்னான்.

சோமு வெகுண்டான். 'பிசினஸ் வட்டாரத்தில் பழகுகிற உனக்கு பிசினஸ் புத்திதான் இருக்கும். அடிகளையும் உன்னைப் போலவே எண்ணிவிட்டாய். சுகானந்தர் இந்த அல்ப விஷயங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவர்' என்று வாதாடினான்.

நண்பன் பேசாமல் முறுவல் பூத்தான். பக்தி, நம்பிக்கை எனும் பெயரால் தன் கண்ணையும் அறிவையும் குருடாக்கிக் கொண்டு அலைகிறவனோடு வீண் வாக்குவாதம் ஏன் என்று அவன் நினைத்திருக்கலாம்.

அடிகள் பணத்தில் குறியாக இருப்பார்: சுயவிளம்பரத்தில் மிகுந்த கருத்து உடையவர் என்று ஒன்றிரண்டு பேர் அவனிடம் சொன்னார்கள். தங்களுடைய அல்ப குணங்களை அடிகள் மீது சாட்டுகிறார்கள் சின்ன மனிதர்கள் என்றே சோமு கருதினான்.

அவன் சுகானந்த அடிகளின் நூல்களை அவரிடமே நேரில் பெற்று வந்தான். விற்பனை செய்வதில் ஆர்வம்

மிகக் காட்டினான். கணக்குப்படி அவரிடம் பணத்தைச் சேர்ப்பித்தான்.

அடிகள் அவன் சேவையைப் பாராட்டினார். நேர்மையையும் உழைப்பையும் புகழ்ந்தார்.

அதனால் சோமுவின் உற்சாகம் அதிகமாயிற்று. அதிகம் அதிகமாகப் புத்தகங்கள் பெற்று, தீவிரமாக விற்பனை செய்யலானான்.

அவனுடைய உண்மையான ஆர்வத்துக்கும் உழைப்புக்கும் நேர்மைக்கும் சாட்டையடி கொடுக்கப்பட்டது போல் ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

வியாபாரத் துறையில் சகஜமானதுதான். பண வசூலில் கண்டிப்பாக இருக்கக்கூடிய பிசினஸ்வாலா எவராவது அப்படி நடந்து கொண்டிருந்தால் சோமு அவ்வளவு அதிர்ச்சி அடைந்திருக்க மாட்டான்.

அவன் மிக உன்னதமான பீடத்தில் ஏற்றி வைத்துப் போற்றி வணங்கிய அடிகள் அப்படி நடந்து கொண்டது தான் அவனை பலமாகத் தாக்கிவிட்டது.

அந்தத் தடவை அவன் அடிகளிடமிருந்து பெற்று வந்திருந்த புத்தகங்கள் பூராவும் விற்பனையாகவில்லை. எல்லாம் விற்றபிறகு பணம் கொண்டு போய் தரலாம் என்று அவன் நினைத்தான்.

குறிப்பிட்ட தேதியில் பணத்தோடு அவன் வரவில்லை என்று கண்ட சுகானந்தர் அதுபற்றி அவனுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

விற்பனையான புத்தகங்களுக்கு உரிய சிறுதொகை சில அவசரச் செலவுகளில் கரைந்து போயிருந்தது. 'அதனாலென்ன! அடிகளிடம் பூராப் பணத்தையும் சேர்த்துத்

தானே கொடுக்க வேண்டும்? அச்சமயத்தில் பணம் புரட்ட முடியாமலா போகும்?' என்று அவன் நினைத்தான்.

அடிகளை சந்திக்கச் சென்றான் சோமு. புத்தக விற்பனை பற்றிய விவரமும் சொன்னான்.

'அது சரி, விற்பனையான புத்தகங்களுக்கு உரிய பணம் எங்கே?' என்று கேட்டார் சாமியார்.

'எல்லாப் புத்தகங்களும் விற்பனையானதும் பணம் மொத்தமாகக் கொண்டு வாறேன்' என்றான் சோமு.

'அப்படி ஏன்? இப்போ விற்றுள்ள புத்தகங்களின் விலையை இப்பவே கொடுக்க வேண்டியது தானே நியாயம்?' என்று வறண்ட குரலில் பேசினார் சுகானந்தர்.

சோமு தயங்கித் தயங்கிப் பேசினான். 'இப்ப கையிலே பணம் இல்லை, பணம் சேகரித்து...'

அவன் விளக்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்க அடிகளுக்குப் பொறுமையில்லை. அவர் முகத்தில் கடுகடுப்பு பரவியது. சொல்லிலும் சூடு ஏறியது. 'புத்தகம் விற்ற பணம் எங்கே? நீ செலவு பண்ணிவிட்டே இல்லையா?' என்றார். உறுமல்போல் ஒலித்தது அது.

அவன் மௌனமாக நின்றான்.

அவர் கடுமையாகப் பேசிக் கொண்டே போனார். 'அது என்ன பழக்கம்? யோக்கியப் பொறுப்பு வேண்டாம்? உன்னைப் போல் வித்துத்திண்ணிகள் பலபேரை நான் பார்த்தாச்சு. முதல்லே யோக்கியன் போல் நடந்து கொள்றது. போகப் போக அமுக்கல் வேலையிலே ஈடுபடுறது. வியாபாரம் என்றாலே நேர்மை குறைவான காரியம் என்றாகிவிட்டது!'

அடிகளின் உரைகள் அற்புதப் பொன்மொழிகளாகப் படவில்லை சோமுவுக்கு. 'அடிகளா இப்படிப் பேசுவது? சுகானந்தர் பேசவேண்டிய சொற்களா இவை?' என்று அவன் உள்ளம் பதைபதைத்தது.

'நீ என்ன செய்வையோ, எப்படிப் பணம் கொண்டு வருவையோ, எனக்குத் தெரியாது. எனக்கு வேண்டியது, விற்பனையான என் புத்தகங்களுக்கு உரிய பணம்' என்று அடிகள் கறாராக அறிவித்தார்.

அங்கேயே நின்று கொண்டிருக்க சோமு என்ன வெறும் பதார்த்தமா? அவனுக்கும் உணர்ச்சிகள் உண்டுதானே!

வெளியேறிய சோமு காலம் கடத்தவில்லை. கடன் பெற்று உரிய தொகையையும், பாக்கிப் புத்தகங்களையும், சரியான கணக்கோடு எடுத்துச் சென்று சாமியாரிடம் சமர்ப்பித்தான்.

இப்போது அடிகள் புன்னகை பூத்தார்.

'இதுதான் நல்லபிள்ளைக்கு அடையாளம். எதிலும் நாணயம் தவறாமல் நடக்கக் கற்றுக்கொள்' என்று போதிக்கவும் செய்தார்.

அவற்றை பொன்போல் போற்றும் மனநிலை எப்பவோ போய்விட்டது சோமுவிடமிருந்து. 'நண்பன் சொன்னது சரிதான். இவர் பக்கா பிசினஸ் மேனாகத்தான் நடந்து கொள்கிறார். பணம், லாபம் முதலியவைகளில் கருத்தாக இருக்கிற ஈவு இரக்கமில்லாத முதலாளிக்கும் இவருக்கும் வித்தியாசமே கிடையாது. கோபம், ஆசை, பண மோகம் முதலியவற்றை துறக்கும்படி போதிப்பது ஊருக்கு உரிய உபதேசம்தானா? சே, இந்தப் போலித் துறவியிடமா நான்

நம்பிக்கை வைத்தேன்!" என்று தன்னிரக்கம் கொண்டான் அவன்.

அந்த நேரத்திலிருந்து சோமு 'ஆளே அடியோடு மாறிப் போனான்'!

வீட்டுக்கு வந்ததும், முக்கிய இடத்தில் எடுப்பாக மாட்டியிருந்த சுகானந்த அடிகள் படத்தை அவசரமாக அகற்றினான். அலமாரியில் அடுக்கி வைத்திருந்த சுகானந்தர் உபதேச நூல்களை எல்லாம் எடுத்து 'வெந்நீர் அடுப்பில் போடலாம்' என்று ஒரு மூலையில் வீசி எறிந்தான்.

சோமுவைப் பற்றியிருந்த பக்தி என்கிற போதை சொல்லாமல் கொள்ளாமல் ஓடி மறைந்தது. □

# உரிமை

மனிதர்கள் மிருகங்களாக மாறிக் கொண்டிருந்தார்கள்...

இப்படிச் சொல்வது கூடத் தவறுதான்; மனிதர்களுக்குள்ளே நித்தியமாய் நிரந்தரமாய் வைகும் மிருக சுபாவம்—குலம், குணம், கல்வி, தர்ம நியாய உணர்வுகள், சமூகக் கட்டுப்பாடு, நாகரிகம், சட்ட பயம் முதலிய வேலிகளினால் ஒடுக்கம்பெற்று, உள்ளத்தினுள்ளேயே பதுங்கிக் கிடக்கும் இயல்பு— இப்பொழுது கட்டறுத்துக் கொண்டு துள்ளி எழுந்தது; குதித்துக் கும்மாளியிடத் தொடங்கியது; தன்னிச்சையாக வெறியாட்டம் ஆடிக் கொண்டிருந்தது. இதுவே கண்ணுக்குப் புலனாகும் உண்மையாக ஊர் பூராவும் பரவி நின்றது.

முந்திய தினம் வரை— ஏன்! உணர்ச்சிகள் குமுறிக் கொதித்துச் சூறையாகச் சுழன்று பின் வெறித் தீயாக வெடிப்பதற்கு ஒரு கணத்துக்கு முந்திகூட— 'நன்றாக இருந்தவர்கள்' திடீரென்று தங்களை மறந்தார்கள். உறவையும் ஊரையும் மறந்தார்கள். இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் மறந்தார்கள். நிகழ் காலத்திலே எவ்வளவு தீமை புரியமுடியுமோ— எத்தனை எத்தனை கொடுமைகள் இயற்ற முடியுமோ— என்ன என்ன அட்டூழியங்கள் செய்ய முடியுமோ, அத்தனையையும்— அனைத்தையும் உடனடியாகச் செய்தே தீர்ப்பது என்று துணிந்தவர்களாய், வெறியர்களாய், பித்தராய், பேயராய் சுழன்று கொண்டிருந்தார்கள் அந்த ஊர் மக்களில் ஒரு பகுதியினர்.

அந்த ஊர்— அதன் பெயர் நமக்குத் தேவை இல்லை. வெறி நிலைக்கு முறுகிவிட்ட அகச் சக்திகளும், அவற்றுக்கு

